பாரமான்மியமென்னப்பகருபநிடத்திரண்டாய்ச்
சாரனுவாகத்தாடுஞ்சதுமறைச்சிலைகயிற்றானும்
வாரியல்கொங்கைமாதேவாசுதேவாதியாய
சீரியமூர்த்தநான்கின்றிறந்தனைத்தெளியக்கூறும். (௰௫)

பஞ்சமவேதமானபாரதகீதைதன்னில்
விஞ்சுமிந்நாலுமூர்த்தவியூகவைபவங்கள்சொல்லும்
வஞ்சிநுண்ணிடையாயிந்தவாசுதேவாதிமூர்த்தம்
எஞ்சலின்றுலுங்கூறுமியற்பிரமாண்டந்தானும். (௰௬)

நாமபாகவதநூலினலதாகியகந்தத்தில்
ஆமிருபத்தின்மூன்றுமத்தியாயத்திலண்டர்
தேமலிகொன்றைமாலைச்சிவன்பிரசேதசர்க்கு
நேமிமான்மகிமைதோன்றநிகழ்த்தியபருவந்தன்னில் (௰எ)

அந்தமான்மூர்த்திபேதமானநாமங்களூடு
வந்திடவியூகநாலாய்வாசுதேவாதியாக
முந்துநாலவரையும்போற்றிமுறைமுறைபணிந்ததன்மை
பந்திசேரளகக்கோதாய்பாருளோர்க்கெல்லாம்பாடம். ( )

சொன்னபாகவதமூன்றாய்த்துலங்கியகந்தந்தன்னில்
மன்னுகாபிலயோகத்தில்வாசுதேவாதியாக
முன்னநால்வகையவாகுமூர்த்தபேதங்கடம்மை
இந்நிலத்துள்ளார்சிந்தைக்கிசைந்திடவிளம்புமன்றே (௰௯)

தொல்லைமேதினிக்குக்கண்ணாஞ்சூரியசித்தாந்தத்தின்
எல்லையினுலகசிட்டியிசைசகுமத்தியாயந்தன்னில்
வல்லணிதனத்துமாதேவாசுதேவாதியாக
நல்லெழில்பெற்றமூர்த்தநான்கையுநவிலாநிற்கும். (உ௰)

திரமுடன்விளங்குமேமாத்திரியெனுங்கற்பந்தன்னில்
அரியவதாரத்தானமளித்திடுங்கிரமஞ்சொல்லி
மருவுமங்கவற்றுளெல்லாம்வாசுதேவாதியாக
உரைபெறுவடிவநாலுமுத்தமமென்றுகூறும். (உக)

வாய்த்தசீர்வியூகநான்கும்வாசுதேவாதியாய
மூர்த்தமீரிரண்டும்பாரின்முந்துறமொழியாநிற்கும்
வேய்த்தடந்தோளணங்கேவீட்டுமர்வசனமான
தாத்திரிபுகழும்விண்டுசகத்திரநாமந்தானும். (உஉ)

வேறுளபுராணநூலுமிருதியும்வேதந்தானும்
தேறியவுலகத்தன்மைசெப்பியவிடங்களெல்லாம்
மாறொருமூர்த்தமிலலாவாசுதேவாதியாகக்
கூறியவியூகநான்கின்கொள்கையைக்கூறுநிற்கும். (உ௯)

உ-வது-சதுர்வேதபரத்துவ விளக்கமென்கிற
பஞ்சராத்திரப்பரிச்சேதம்.

மாதுநல்லாய்கேளிந்தவாசுதேவாதியாக
ஓதியமூர்த்தபேதத்துண்மையையுரையாநின்ற
பேதமிலாதபஞ்சராத்திரமென்னுமந்நூல்
வேதமேநிகர்க்குமென்னுமேன்மையைவிளம்பநீகேள். (௧)

வாரணிகளபக்கொங்கைவஞ்சிநுண்மருங்குன்மாதே
ஆரணநாலோடைந்தென்றகிலசம்மதமாய்நின்ற
பாரதகாதைதன்னிற்பயின்றிடுகின்றதன்மைச்
சீரினையெல்லாந்தோன்றத்தெளிந்துசெப்பியவிடத்தில் (௨)

பகருமிம்மோக்கதன்மம்பாரதக்கடலைஞான
மகிமைகூர்மதியத்தாலேமதித்துகந்தெடுக்கப்பட்ட
தகைமைசேர்வெண்ணெயென்றுந்தனையுளோர்க்கிதுதானந்த
இகலிலாநூலாம்பஞ்சராத்திரத்திதயமென்றும். (௩)

பரத்துவவிளக்கமாமிப்பஞ்சராத்திரநன்னூறான்
இருக்கெசுச்சாமாதருவத்தியத்கையாயிருகதுமென்றும்
விரித்ததாரணன்றன்வாக்கால்விளம்பிடப்பட்டதென்றும்
உருத்திரற்கயனற்நூலினுண்மையையுரைத்தானென்றும். ()

நாரதன்றனேகானதற்றவமுனிவர்க்கெல்லாம்
டாரிணிலிந்தநூலைப்படியின்மேற்பகர்ந்தானென்றும்
ஞரமரித்தநூலேயிலங்குபாரதமறைக்குச்
சிருபநிடந்தானென்றுந்திரம்பெறச்செப்புமாதோ.

நீசெங்கருடனைப்பேர்நேமிமாலுலகுக்கெல்லாம்
பாடமாயுரைக்கப்பட்டபஞ்சராத்திரநன்னூலவ்
வாடரவணையிருன்றனருச்சனைக்குரியதென்றும்
வீடுமபருவத்தாலும்விரித்ததவ்வைநந்தாம்வேதம். (௬)

சாந்திபருவத்திற்றனுஞ்சதுமறைச்சாரமாகி
ஏய்ந்திடுமகிமைப்பஞ்சராத்திரநூலையேமப்
பூந்துகில்வண்ணன்மேருப்பொருப்பினிலிருந்துமேனாள்
ஆய்ந்தனனென்னுந்தன்மையவனியோரறியக்கூறும். (௭)

ஞானகாண்டத்தின்மூன்றுய்திவிலத்தியாயந்தன்னில்
பாணிகர்செஞ்சொலாகப்பரிசரவசுவின்செய்கை
தானியல்பெறவரிக்குர்கலத்தின்மாதவனார்பூசைத்
தீனமில்லாதபஞ்சராத்திரமிசைந்ததென்றும். (௮)

நிலைபெறுமிந்தநூலானியமித்தநைமித்தங்கள்
உலகினிற்செய்யப்பெற்றுமொன்றவையனந்தமென்றும்
பலமறைபடித்துளோரும்பஞ்சராத்திரங்கற்றோரும்
அலகிலாநேமிமாலையன்புடனடைவரென்றும். (௯)

ஓதியவேதர்தானுமூயோகசாங்கியமும்பாரில்
ஏதமிலாதபஞ்சராத்திரமென்னுநூலும்
ஆதிதொட்டொன்றுக்கொன்றங்காங்கியபர்கமாகித்
தீதறவிளங்குமென்றுந்தெளிவுறச்செப்புமன்றே (௰)

வேதநாதங்கள்பம்பும்வீணைநாரதனார்மேமேலார்
ஆதிநாரணனைச்செம்பொனடியிணைபணிந்துபோற்றிச்
சோதாவுன்னையிங்கர்ச்சித்திடுங்கிரமந்தன்னை
ஓதுவாயென்னவீரேழுலகமுமளந்தமாலும். (௰௧)

பாவியபுருடசூக்தம்பஞ்சராத்திரங்கள்சொன்ன
கிரமமார்க்கத்திற்செய்கின்றதென்றுரைத்ததாக
மருவுசத்தியனார்சொன்னவாசகவராகந்தன்னில்
அரிவையேயறுபத்தெட்டாமத்தியாயத்திலோதும். (௰௨)

வஞ்சிநுண்ணிடைமடந்தாய்மற்றுமெவ்விடத்துந்தானே
பஞ்சராத்திரநூலுக்குப்பாத்திரர்மறையோரென்றும்
விஞ்சுசூத்திரருக்கெல்லாம்விகிதமன்றென்றும்பாரில்
துஞ்சமாகியமுத்திக்குச்சாதனமிதுவேயென்றும் (௰௩)

பத்தியும்வெள்விதானும்பஞ்சராத்திரநன்னூலும்
மெய்த்தொகைமறையுஞ்சென்மமறந்தகோடிகளினின்றும்
தொத்தியபாவமெல்லாந்தொலைந்துளபேருக்கல்லால்
சித்தியாவுலகிலென்றுந்தெளிந்திடப்பகருமன்றே.' (௰௪)

அன்றியுமெழுபத்தொன்றாமத்தியாயத்திற்குற்றம்
இன்றியேதிகழும்பஞ்சராத்திரக்கிரமந்தானே
வென்றிமால்பூசனைக்குவிசேடமென்பதனையெல்லாந்
துன்றுகப்பெய்தப்பூசைசொல்லியவிடத்திற்சொல்லும் (௰௫

போற்றுநான்மறையினுளும்புராணநான்முறையினுளும்
ஏற்றமாய்விளங்கும்பஞ்சராத்திரத்தானுஞ்சிந்தை
தேற்றமாயோகசீலர்துயானியாநிற்பமென்றும்
சாற்றிடாநிற்குநீதிதகவிராயாயணத்தும். (௰௬)

பங்கபவந்தியானைப்பஞ்சராத்திரநூலசொல்லும்
அங்கமேயங்கமாகவருசசனைபுரியவென்றும்
மங்கலச்செஞ்சொலாஞ்சமதக்கினியிருடிகானும்
சங்கையிலவிமேதகன்சொன்னசங்கிதைதானுங்கூறும். (௰௭)

இருக்கெசுசாமாதர்வமென்னும்வேதம்புராணம்
பருப்பொருளன்றிநின்றபஞ்சராத்திரநூல்மேமோர்
கருத்துறுமூலராமகாதைபாரதங்கடாமே
திருத்தமாயுலகத்திற்குத்திரப்பிரமாணமென்றும் (௰௮)

இவ்வகைநூல்கடீ கட்கேற்றநூலிவைகருமாறுபீக்
கவ்வைசோநூலகளெல்லாங்ககளொட்டெருபாலென்றும்
அவ்வழிநூலான்முதறியடைவதற்கருமையெனறும்
மவ்வலசேரளகக்கோதாய்மாபிரமாணடங்கூறும். (௰௯)

பையரவக்குன்மின்னேபஞ்சராத்திரநூறன்னை
மெய்யெனதமதரிந்துவேதவியாசர்நிசயித்தலாலும்
பொய்யறுமந்நூல்வேதப்பொருளைமேயபுகறலானும்
வையம்மெலிதும்யசொல்லின்மகப்பிரமாணமாமே. (௨௰)

என்னவிப்பிரமாணங்களெண்ணிலாவெவ்வேத்திரியம்பிப்
பன்னுசெற்றிறளிந்திரஞ்சீர்ப்பஞ்சராத்திரநூறன்னைத்
தனவிபரறமேயதசாரமென்றுரைத்தலோடும்
அன்னமென்னடைப்பூங்கைசையாகமவலவிசொல்வாள் ()



௫-வது-பரமார்த்தநூலவைபப்பரிச்சேதம்.

பார்புகழ்சுருதிமானேபஞ்சராத்திரமென்கின்ற
சார்பநூலகொண்டேமேலுஞ்சாற்றுசல்கருச்சோவன்றி
தோமபெறும்பொதுநூலாகநீசொலும்படிக்கசெறு
சோர்வறுபிரமாணத்தாற்சொல்லுநூலுமேடாவென்ன (௧)

பகர்மறைமாதுமானேபஞ்சராத்திரத்தைப்பார்
புகழ்பிரமாணமென்றுபுகன்றதுதனைநூலிணும்
நிகழ்பிரமாணமாகிட்டறிவாளர்போற்ற
திகழ்வுறுநூல்களெல்லாஞ்செப்புவெண்சிற்றைசெய்டாய். (

நித்தியமாதலான்மானிடங்களாரிடங்களன்றிச்
சுத்தமாயுலகிற்றானேதோன்றலாற்சொல்வதெல்லாம்
சத்தியமென்றுதன்னைச்சகலசாத்திரபுராணம்
உத்தரித்திடலால்வேதமுயர்பிரமாணமாமே. (௩)

பான்மதியனையாய்பன்னிரண்டதாம்பருச்சத்திரந்
தாமனுவாகந்தன்னிற்றன்மனுமிருதிசொன்ன
வாய்மையையெகுருப்பேராமாமறைசொல்லலாலத்
தேமனுமிருதிதானேதிடப்பிரமாணமாமே. (௪)

நிகரிலாவுருவைச்சார்ந்தநிமலதாய்விளங்கிநீடும்
அகிலமேலவேதந்தன்னையனுசரித்திடுகையாலே
சிகரமாமேருவென்னத்திகழ்தடங்கொங்கைநல்லாய்
தருபிரமாணமாகுந்தருமசாத்திரங்களெல்லாம். (௫)

எவ்வகையிராசியங்களெவ்வகைப்பாராசியங்கள்
அவ்வகையுள்ளவெல்லாமங்கையினெல்லியேபோல்
கவ்வைதீர்கருத்திற்றோன்றக்கடவனநினக்கென்றந்தத்
தெய்வவான்மிகற்குவேதன்றிடவரமீதலாலும் (௬)

நற்பரனுமாயோன்றசாதனிடத்திலேவந்
துற்பவித்திடலால்வேதமோங்குவான்மீகன்றன்பால்
வைப்புறத்தோன்றிராமாயணமதாமகிமையாலே
முற்படுமிதிகாசச்சீர்மொழியதற்கெய்தலாலும் (௭)

கூறுமங்கதுதானூறுகோடிவித்தாரமாகி
ஈறிலாவதனிலேயோரெழுத்தையுச்சரித்தபேர்க்கும்
மீறுமாபாதகங்கள்விநாசமாமேன்மையாலும்
தேறியவிராமகாதைதிடப்பிரமாணமாமே. (௮)

பாரவிண்டுபுராணத்திற்பராசரன்மயித்திரேய
விரதனைநோக்கிநீயவ்வியாசனைவிண்டுவென்றே
கருதுதிவியாதன்றனக்கண்ணனேயல்லனாகில்
அரியபாரதநூல்செய்யவார்வசமென்னலாலும். (௯)

பானுவான்மதியாற்றுங்கபாரதகதையாலன்றி
மாநிலத்தந்தகாரமாறுமாறெங்ஙனென்றும்
ஏனையபுராணத்துள்ளயாவையும்பாரதத்தில்
தானுளவில்லாவச்சொற்சகலத்துமில்லையென்றும். (௰)

பாரதகாதைதானேபஞ்சமவேதமென்றும்
பேருலகத்திலெல்லாம்பிரசித்தியாகையாலும்
சீரியமகிமையாரிற்சிறப்பினுற்றன்னில்விஞ்சும்
பாரிலொன்றிலாத்தன்மைத்துபாரதமாகையாலும். (௰க)

ஒளிக்கிளர்பொருள்சேர்வேதத்தொடுபுராணத்தையெல்லாம்
வெளிப்படுத்துவதற்காகவியாதமாமுனிவன்மேனாள்
வளப்பமுற்றிடும்பார்மீதுவாய்த்தமாபாரதத்தைக
கிளத்தினையென்றுருதர்கேண்மையாலுரைத்தலாலும். (௰உ)

வளம்பெறுமெய்ம்மையானவாசகனென்றுபோற்றும்
களங்கமில்வியாதனன்பாற்கட்டுரைத்திடுகையாலும்
தளம்பெறுமலரோன்கேட்டுச்சம்மதித்தருள்கையாலும்
விளங்குமாபாரதந்தான்மிகுபிரமாணமாமே. (௰௩)

பொன்பயில்கமலத்தண்ணல்புராணமானவெலாமுரைத்த
அன்புடனுரைத்தான்வேதமவன்றிருவாக்கினின்றும்
பின்புதன்னிச்சையாலேபிறந்ததிவ்வுலகிலென்ன
இன்பமாய்விளங்கும்வாயுபுராணத்தினிசைக்கையாலே (௰௪)

இத்திறப்பழமையாகவெழின்மறைவிளம்புகின்ற
உத்தமப்பொருளையெல்லாமுண்மையாயுரையாநின்ற
வித்தகப்புராணமெல்லாமேதினிமாந்தருக்குத்
தத்தைபோன்மழலைமாதேதகுபிரமாணமாமே. (௰௫)

சத்தியென்கின்றநாமத்தந்தையைவதைத்தோராய
குத்ரவரக்கர்தங்கள்குலமெலாமறுப்பதான
சித்திரவேள்விதன்னைச்செய்தியான்முடிப்பெனென்றே
பைத்தலையரவிற்பொங்கிப்பராசரன்முயன்றநாளில். (௰௬)

புலத்தியன்வசிட்டனென்னும்புனிதமாமுனிவர்வந்து
விலக்கலுந்தவிர்ந்துநின்றமெய்ப்பராசரனைநோக்கிச்
சலத்தைவிட்டனையுனக்குச்சதுமறைப்பரமார்த்தங்கள்
நிலத்தினிற்றெரிகவென்றுநீள்வரங்கொடுத்தலாலும். (௰எ)

நீதிசேரெசுருவேதநிகழ்ந்தசீராரணத்தில்
ஆதியாம்படலத்தொன்பதாமனுவாகந்தன்னில்
மேதைகூர்வியாதன்மேன்மைவிரிப்பதாய்வியாதனந்தத்
தீதறுபராசரற்குச்சேயன்றேவென்னலாலும். (௰அ)

பூதலமுழுதும்போற்றும்புகழ்ப்பராசரன்றனுறு
வேதநூல்கண்டவேதவியாசன்றன்சுகனார்தாமும்
திதறுந்தோற்றந்தெய்வத்திருவவதாரமென்று
ஓதிலிங்கப்புராணமொழிந்துளபடியினாலும். (௰௯)

அப்பராசரனைநோக்கியல்பொடுமைத்திரேயன்
ஒப்பறும்புவனமெங்கேதோன்றியதொடுக்கமெங்கே
இப்பிரவஞ்சமெல்லாமெவனதுசொரூபமென்றே
தப்பறவவனையேநிச்சாணியமாகக்கேட்டான். (௨௰)

மருவுஞானிடர்க்குளெண்ணும்வரபராசரனார்தாமும்
அரிமயந்தானேநிமெண்டகோடிகளதெல்லாம்
பரிவுடனவனேயென்றும்படைத்தளித்தழியாநின்றான்
விரவிலீலையினாலென்றுவிசேடமாய்ப்பகர்கையாலே. (௨௧)

விரியவேவயவருரைத்தவிண்டுவின்புராணந்தானும்
தலாயினின்மாந்தர்களெல்லாந்தருபிரமாணம்பின்னர்க்
கரதலாமலகமென்னக்கணபிரமாணமாக
இருமைசேர்புராணம்வேறொன்றின்னமுமியப்புவன்கேள்.

விதித்தறிமூர்த்தர்தம்முண்மேன்மையாலெல்லாருங்காலை
முதற்பெயராகியெல்லாமுனிவருந்தொழவும்வாக்கால்
துதிக்கவுஞானியனுமெய்ச்சுகமுனிசகலர்க்குஞ்சம்
மதிக்கவோதுகையாற்பாகவதம்பிரமாணமாமே. (௨௩)

மற்றுமோதியசாத்திகவரபுராணங்களெல்லாம்
வெற்றிவேற்கலைஞர்வேதவிருத்தமற்றிருக்கையாலே
நற்றடங்கடன்மூன்றோடுநான்குசூழ்செகத்துக்கெல்லாம்
தெற்றெனவாகசசொல்லுந்திரப்பிரமாணமாமே. (௨௪)

அப்பிரமாணமானவருகர்நூல்புத்தர்நூலும்
எப்பிராணியையுங்கொல்லாவிரதம்மவிரதமென்னும்
மெய்ப்படுவசனம்வேதவிரோதமில்லாமையாலே
தப்பிலாவுலகுக்கெல்லாஞ்சம்மதஞ்சிறிதேபோல். (௨௫)

எண்ணுதாமதவிராசதப்புராணங்களுள்ளும்
வன்மைமாமறைக்குமொத்துமாறுபாடிலாதவெல்லாம்
பண்ணினையமுதைத்தேனைப்பாலினைப்பழித்தசொல்லாய்
திண்ணியவுலகுக்கெல்லாஞ்சிலபிரமாணமாமே. (௨௬)

## ௪-வது-திருநாமவிவரணப்பரிச்சேதம்.

என்றுநால்வேதவல்லியிலைசப்பவாகமத்துமானும்
நன்றுரைசெய்தாயிந்தநான்மறைநயந்தநன்னூல்
வென்றிவேற்றடங்கண்மாதேமிகுபிரமாணமேயாம்
அன்றெனச்சொல்வாரில்லையாயினுமொன்றுநீகேள் (௧)

பரவுமச்சதுர்வேதத்தாற்பரியமாம்பரமார்த்தத்தைத்
தெரியவென்றாலெவர்க்குஞ்செவ்வையிற்றெளிவுறாது
தரையின்மேலெங்கள்சைவசமயமூத்தரித்தமேலோர்
உரைசெய்தாரதனையெல்லாமுள்ளவாறுரைக்கின்றேனால் (௨)

[வேறு.] [ணீ
ணவன்பொருட்டுவணக்கங்குணங்களாலேமிகுத்தவனிப்பாரின்மேலெவ
யவஞ்சமிக்கவிலங்கியநாரணோபநிடஞ்சொல்லுமெவன்றனுபாசனை
உவந்துதன்புத்திலையமுயல்விப்பதற்குன்னுவானெவனோநலவேள்வியா
நிவந்தநாயகனாவானெவனவன்நீலகண்டநிருபகனாகுமே [ய்

உலகமீச்சரமுள்ளதில்லாதெனயோகர்சாங்கியரோர்ந்துணர்ந்தோதியே
சொலுமவீச்சுரநாமமயனொடுதுளபமாயனைச் சொல்லப்படாமையா
ல், நலமதாகியவாரணவல்லியேநண்ணுமீச்சரநாமமிளம்பிறைக், கலை
கொள்வேணியனுமவனேநமக்காரம்பாலையுங்கைக்கொளுந்தேவனே.()

இன்னசொல்லியவாகமவல்லிமுன்னிவனுமீச்சரனென்றுமைம்பங்கனைச்
சொன்னதன்மை தனிற்றாழ்ந்தவர்களைச் சுட்டியும்பலசொல்லுமுருடி
யாய், மன்னிநின்றுளவாசகத்தாலுமேமற்றதெப்படியேல்வனக்கள்ளி
யை, நன்னிலத்தின்மகாவிருக்கம்மெனநாமமிட்டுநடக்கின்றதொக்குமே

மொழியுமீச்சுரசத்தத்தினாற்சொலுமுக்கியப்பொருளாகியமூர்த்தியி
ன், பொழியுமாழியங்கைப்பரந்தாமனைபுவனகாரணனுமப்புனிதனைப்
பழுதிலாதநல்லீச்சுரச்சொல்லினாற்பகருகின்றன பல்பிரமாணமொன்
றொழிவிலாமனுரைக்கையருத்தியினோர்ந்தியான்சிறிதோதுவல்கேட்டி
[யால் (௪)

நன்றிகூர்தருமீச்சரனென்பதோர்நாமநற்பொருளுள்வகைத்தோற்ற
மாம், துன்றுலோகத்திருட்டியதிற்புகுந்துனிவுமிககதொழினியமித்த
லால், மன்றல்சேர்குழலாயிச்செயலெலாம்வண்டுழாய்முடிமாயவன்வி
னையில், நின்றதென்றுதயித்திரியோபநிடத்தின்வாய்மைநிகழ்த்தியிருக்
[குமால். (௭)

நீரசத்திருவுந்திமுகுந்தனேநித்தனுநியந்தாவுநிறைவினால்
சாரயிசமொரியங்களுற்பத்தியாந்தானமும்பலவானவைச்சொரியமும்

பூரணம்பெறவாழ்வானுமங்கதுபோற்றுவானுமருள்பவனுய்ம்மெனப்
பாராமாற்பவுபநிடத்தாதியாய்ப்பன்னுநீடனுவாகம்பகருமே. (அ)

அனையதானமறைப்பொருட்கேற்பயானகிலமேலாகமனைத்தும்படைத்த
தில், சனனகோடியினுள்புகுந்தேறியந் தாவுமானது மெய்ம்மணிமாலை
யில், புனைபநூலினைப்போலெனக்கண்ணனூர் பொருதனஞ்சயபூபற்கு
ரைத்தனும், எனிலுயர்ந் துளவீச்சாரில்லைவேறென்றசொல்லுயியற்கி
[தைசொல்லுமால. (௯)

ஆயிரம்புயவாணனுக்காகவந்தன்றுதோற்றவரனுரிரதமே,லேயிருந்தரி
யேயொருவன்றனியீசனென்பதுமீறிலியென்பதும், தூயநீர்பரமாத்
துமனென்பதுஞ்சொற்றரும்புருடோத்தமனென்பதும்,எயநானறிந்
தேனெனவெள்ளணியேயேத்தியேத்தியிறைஞ்சினனென்னவும். (௰)

அகிலகாரணவீச்சுரனுனநாராயணன்றனையர்ச்சனைபெய்திடார்
பருநீர்கலிகாலத்திலவைதிகப்பண்பிலாநெறிப்பாடண்டமொன்னவும்
திகரிருரணமென்றுளவீசுரனிகிலசிட்டிநியாமகனென்னவும்
புகலுழவிசுபராசரர்வாய்மையாற்பூத்தவின்டுபுராணத்துரைக்குமே ()

மண்ணின்மீதிற்கிருவுதுவென்பெயர்மவுலியீச்சுரனென்றும்வண்டாம
ரைக், கண்ணர்தம்மைப் பகர்ந்தனன்பின்னையுங் கன்மபாசங்கடந்துள
பேர்களே, எணனுமாயனையீச்சுரனென்னவேயாச்சவற்கமுமோதுமி
தன்றியே, வெண்ணெயுண்டவனைப்பிரசாபதிமிருதிபீசுரனென்றுவி
[ளப்புமால. (௰௨)

எந்தைநாரணனேபரஞ்சோதியாமீசனென்னவெடுத்துரைசெய்திடும்
கந்தமாபுராணத்திலும்பாரதகதையிலாதிகடைநமித்தன்னிலும்
மூந்தமாயனையீச்சுரனேயெனமொழியுமற்றுமுருந்தனுக்கப்பெயர்
அந்தநாமசகத்திரமாகியவானுசாதநிகதிலுமுள்ளதே (௰௩)

வண்ணவார்சடைச்சங்கரநாதர்தம்வனிதைதன்னுடன் வானவர்க்கீசரும்
கண்ணனேயெனக்கீச்சுரனென்றசொல்கன்னபாவகதையினுங்காணலா
எண்ணுமிந்தமகபாரதத்துளும்மேற்றசத்தவிருடிசம்வாதமும் [ம்
நண்ணுமாயனையீச்சுரனென்னவேநானிலத்திலைலம்பெறவோதுமே. ()

ஆதலாலும்பசுபதத்தாலும்வேறடைசொலற்றபதத்தாலுமாகியே
சோதியாகியநாரணன்றன்னையீசுரனெனுஞ்சொற்றுலங்கிடச்சொல்
லுமால், தானுசேர்குழலாயிச்சொலென்றும்மோர்சகலமாகியசத்தசமூக
மும்,ஓதுகின்றதவன்றனையென்பதற்குணமைசேளெனவோதுவதாயிருக்

அரியைபச்சுதனைச்சிவனென்னநாராயணோபநிடஞ்சொலுமாடல்வேல்
பொருகணுயிதுவன்றியும்பட்டுமப்புனிதம்றுடப்பாருள்கொண்டரு

நிலவானுதலாகமலைக்கிபேசிந்தைபிற்றுயர்தீர்த்தினிர்தன்மைநீள்,மல
ரின்மணவாளன்செயலெனவாய்த்தசீர்ப்பிரமாண்டத்திலோதுமே()

பிரளயத்திற்பிரமன்சதாசிவப்பெயரினன்மூகலோகைப்பெரும்பயங்
கரசொருபனுமாயழிப்பவன்கல்லணனென்னுங்கமலப்புராணநூல்
டரவுவேதனிடத்திற்பிறந்ததன்பாவந்தீங்கப்பரிந்துதற்பேரிடென் [தே
னைசெயாநின்றழுத்துகொண்டுதோளுடையினனையுருத்திரனென்ப

அயனிடத்திலுமாபதியுற்பவித்தழுதருத்திரனும்பெயர்பெற்றது
நியமமானசுபாலோபநிடமூநிகமெசுருதிகமமுஞ்சொல்லுமால்
உயருருத்திரநாமமுருந்தனுக்குள்ளதன்மையுலகோர்க்குரைமாய்
நயனமாம்பஞ்சமவேதபாரதநவில்சகத்திரநாமத்துமோதுமே (௨௯)

உற்றதுன்பங்களைபவனதலாலேங்குமாலையுருத்திரனென்னவும்,மற்றி
வன்சகலர்க்கும்பெரியனுமகிமைகொண்டுமகாமகவனென்னவும், சற்ற
லாதசுகருபியாதலாற்சார்ங்கபாணிதனைச்சம்புவென்னவும், கொற்றவை
ச்செரியத்தால்விளங்கும்வைகுந்தன்மெய்ப்பெயரிந்திரனென்னவும்.

தோலினற்புறம்போர்த்சவுடம்பினைச்சுருக்கிரப்படிவம்போலியக்கலா
ல்,காலம்மழளந்தாற்குக்கிருத்திவாசன்னெனும்பெயர்தான்வந்ததென்
நீலவார்குழலாய்பலவாகியநிகிலலோகநியாமகனுகையால் [னவும்
வலமாமறைபோற்றமுருந்தனுமெம்பிரான்றனையீச்சுரனென்னவும்.()

பேசுநாகமடைவித்தல்கொண்டுமால் பேர்பிநகியெனப்பெற்றதென்
னவும்,ஆசரித்தவர்தம்மைப்பெருமையோராக்குகின்றவருளின் பெரு
மையால்,கேசவற்குப்பிரமனெனும்பெயர்கிளர்ந்தெடுத்ததெனவுங்கிள
ர்செகம்,எகிலாமலவிவைதுகொண்டமாலேவிரிஞ்சியெனுமவனென்னவும்

விவிதமானவிலோசனனுகையால்மிக்கமாலைவிருபாக்கனென்னவும்,பு
வனசிட்டிசெயலாலரியையேபோற்றுநீள்விச்சுவகன்மனென்னவும், உ
வமையில்லாதவண்டங்களையெல்லாமோங்குசிருதாத்தினில்வைத்தலால்
நவையிலாதவிரணியகர்ப்பனுநாமமூர்த்தியுநாரணனென்னவும் (௩௦)

நிகிலலோகம்வரம்பழியாமலேநிலைநியுத்திநிகழ்த்தினிநீர்மையால்
சகலவேதபுராணசொருபனுஞ்சக்கரபாணியைச்சர்வனென்னவும்
தொகையினன்மிக்ககாரணவாச்சியாய்ச் சுருதிவேறுசொலுஞ்சொற்ச
மூகமும்,மகிமைநாரணனைச் சொல்லுமென்னவும் வாய்த்தசீர்ப்பிரமா
[ண்டமுரைக்குமே. (௩௧)

அரிமுகுந்தனநந்தன்பராபரனனநாமங்களானைச்சொலுமவன், ஒருவ
னேயத்தனுமுயிர்க்குளே யுறைகுவானுமுருத்திரமூர்த்தியும், பெரு

மைசேர்நியந்தாவுஞ்சுவாமியும்பிராணதாரியுமென்றுபல்பேதமாய்ச்
சுரிகருங்குழலாகமவல்லியேசுபாலநோபநிடத்தினிற்சொல்லும்பட (௫௨)

அனந்தசாகைகளாகியவேதவேதாந்த நூல்களிலட்சரக்கூறெலாம்
வனந்தனினுளவத்தொடைமாயனுமங்களேயெனவாழ்த்திமதிட்பிறவ்
புனந்தசீர்மிருதித்தொகைசொலுமப் பொருள்விளக்கப் புவனந்திட்
டாந்தமாய்த்தினந்தினந்தொறுமந்தணரோதுமத்தியானவந்ததநினிந்
[செப்புவார்களே (௫௩)

சிவருத்திரசம்புமயேச்சுராதிப்பெருந்திருநாமங்கள்செங்கண்மா
யவனிடத்துநிகழ்வதுபோலநாராயணுதிசத்தங்களுமன்னமே
தவமிருங்கமலாசனநான்முகன்றுழ்செழுஞ்சடைசங்கரனுதியர்
எவரிடத்துமபொருந்திநிகழ்ந்திடாவென்றுவாமனியதழ்லியப்புமே ()

அயனுமிந்திரனும்பராபரனுமாமனையன்புடன்போற்றிநீ
மையைபுரிந்துமுகுந்தவேமகசாதாரணப்பெயர்தந்தருளாமெயன
தயமோடந்தவயனுக்குடர்சதானந்தன்வேதனவிறுன்முகத்தனம் [ந்
புயவரோதயன்மெய்ப்பிரமாவெனப்புவனமெங்குப்புகழ்கின்றநாமமு

பக்கமொன்றினிற் பச்சைப்பசுங்கொடி பாந்திலங்கும் பவளக்கிரியை
முக்கணும்பர்பிரானுக்குநீறணிமுதல்வனுக்கிரமூர்த்திகபாலிசேர் [ம்நர்
நக்கனென்றியலுஞ்வசைநாமபு . . . திருநாரணனென்பதும்
கைக்குனெல்லிக்கனிபோற்பிரமருபசந்தமானபுராணமூங்காட்டுமே.

௫-வது-வந்தனயோக்கியப்பரிச்சேதம்.



தையல்பாகனுடனயனுஞ்சாதாரணப்பெயர்சாற்றினனிநலா
வையமேற்பொருவாகவிளங்குசாமானியச்சொற்றுவாச்சியனும்வன்
பையராவணையானேயவன்சகம்பணிவதற்குமெய்ப்பாத்திரமென்றிரு
மையுலாவிழியாகமவல்லிசீர்வாய்த்தவேதமடந்தைக்கியம்புவாள். [ம் (௧)

புனிதமாதிருநாமங்களெண்ணுவார்போலநீயம்புலிச்சேகரனையவ்
வனசவேதனிற்றேன்றினனென்றனைமற்றதற்கெதிராமாற்றமுமேசொ
ல்வேன், அனையநாமஞ்சிவனுக்குமாகமத்தனந்தகோடியுளதறிற்கநின்
மனமுடன்படவந்தனைக்குப்பிரமாணமோதுவெனென்றுமற்றுஞ்சொ
[ல்வாள். (௨)

கருதுசூலகவேள்வியிலேநமக்காரபாத்திரன்கைக்கொளுமனென
உரியதோர்பசுவீதலிலுலந்தவோங்கும்வேள்விக்குமாடநிறந்த . . . ரீத்
தனையின்மீதுநிகழ்தலினுலுநற்சதவுருத்திரியதிலதானு . .
கருகமாம்பலவந்தனைசொல்லுதலாலும்வரதனையங்கவன்றன்னதே. (௩)

ஆகமக்கொடிபவ்வுரைகூறவாரணமடந்தைபகர்வாளிவையே
ச்சரப்பிறைபானைச்சதவுருத்திரியம்வந்தனைசெப்பியவாறுகேள்
உணர்பத்தியிருற்றொடக்கத்திலேயுககிரத்தின்வழிவானவும்பொருட்
டாகமேவநமவென்றதுமத்திமத்தலைவுசோனுவாகங்கடம்பிலே. (௪)

பலவிடத்திலும்வாதைசெய்வானெனும்பன்புபுத்தியணிரீவியபத்தினுவ்
அலகிலாமவரூவந்தனைசொல்லியந்தத்திலேயெங்களாப்புப்பசுர்சுகா
நலகுமாதருளீறுசெய்யாய்கொலெலீறிந்தலாலவ்வியஸ்வந்தனையெலாங்
மெலிவுகூர்பயபுத்தியில்லதுநீள்பாத்துவநிச்சயித்தல்லவே. (௫)

பாரிலிப்படியேயபயபுத்தியாற்பணிவதற்கொருபாத்திரமாகிய
கோரவிக்கிரமச்சூலபாணியைக்கூறுசூலகமேவள்வியதனினும்
சீரின்மிக்கபடிநமக்காரபாத்திரனெனுந்திறஞ்செப்பியதென்றனும்
தாரமைத்தகுழன்மறைமானுடன்றக்கவாகமத்தையல்விளம்புவாள். ()

ஓதுமிச்சகத்துக்குச்சுவாமியாமொருவனுக்கன்றியுக்கிரஞ்சொல்லுமோ
கூறுநிற்பப்பயமும்வைக்குமிணையிலார்க்கன்றியாவருஞ்செய்வரோ
வேதவுத்தமியேயென்றுரைப்பவுமின்னுறுளும்வியப்புடனாகமக்
கோதையைக்குறித்திங்கிவைகேளெனக்கோகிலப்பெடைபோலிவள்கூ
[றுவாள். (௭)

அந்திதேவன்றனையெசுவேதமைந்தானகாண்டமைந்தாம்பருச்சத்துனிம்
பொங்குநீள்வயவேங்கைவரிப்புலிபோன்றசிற்றம்பொறுத்தருளாமெ
ன, இங்கிதம்பெறவந்தனைசொல்லுமாவிதுவுமன்றியிவன்றனையாரணம்
தங்குபஞ்சகமாம்பருச்சத்திலுந்தக்கவந்தனைசாற்றியதன்மைகேள் (௮)

ஒன்றுகேண்முதலாப்பலவந்தமாயோங்குசீர்நமக்காரமுரைத்திடும்
குன்றுநேர்முலையாயிதுவன்றியேகோலமானவிருடிக்குமாத்தையும்[ம்
நன்றிகூர்வந்தனைசொல்லும்பின்னைபுநாமவேள்விநடாததுமிடத்திலு
துன்றுநீதிபுனைசவுளாதியாய்ச்சொல்லுகின்றசுபகருமத்திலும். (௯)

கூர்மமாகியசத்திகடம்மையுங்குறித்துவந்தனைகூறுமிக்கொள்கைபோல்
சீரிதாகமணஞ்செயலாகயாத்திரைகடம்பினுந்திங்கணுகாமலே
வருவாவுசகுனப்பக்கிக்கும்விறேற்றவேதயியம்பிவிதிக்குமால்
பாரின்மீதுபயங்கரபுத்தியாற்பணிந்தயாவுட ரத்துவமோவென்றாள்.()

சேய்வாரணவல்லியித்தன்மையைச்செப்பலோடுஞ்சிவாகமவல்லியும்
ஆயதாஞ்சதருத்திரியத்தினிற்சொற்சராசரத்தோமங்களைக்குறித்
தேயவேசொல்லியவந்தனைக்கெலாமிந்துமோலியிடையேயடைதலால்
ஆயசங்கரனேசருவாந்தரியாமியென்பதற்கையமுண்டோவென்றாள்.()

அந்தவாய்மொழிக்காரணவல்லிபுமாலகண்டனையந்தரியாமியெனி
றெந்தநூலுமியம்புவதில்லையவ்விறைவனன்றுகன்றந்தவரத்தினால் ,
றூந்துமெண்வகைமூர்த்தமதாகியுறைதலையாலவன்றுவுலகத்தொடும்
தொந்தமானசொரூபகனென்னவேதாயவந்தனைசொன்னகாணென்றன்

ஆரணக்கொடியிம்மொழிகூறநீடகிலரூபமனைத்தையுநீயெனத்
தாரணிக்குப்பராபரன்றனலாதவனையாமறைசாற்றிடுமோவெனச் [ம்
சீரணைத்திடுங்கல்விச்சிவாகமச்செல்வமங்கையுஞ் செப்பினள் செப்பலு
வாரணைத்ததுணைத்தனவாரணவல்லிமீளமறுத்துரஞ்சொல்லுவாள். (௰௫)

ஆவிநீசகநீயண்டாண்டநீயன்னநீதெள்ளமுதநீயற்பல
தேவுநீயெனவேயெசுவாரணந்தேங்குநீணாச்சிறப்பித்ததிதலால்
தாவுமக்கினியோடந்தணனாயுஞ்சகலதேவதையென்றதனித்தனி [ள்
பூவிலோதியவப்படிமுக்கணற்புதனையும்மறைபோற்றிற்றென்றேறிரு

ஆகமக்கொடியம்மொழிகேட்டலுமந்தணாளனையக்கினிதேவனை
மேகநீளாப்புகழ்ந்ததும்பாலவெவ்விடையிறுணையும்வேதம்புகழ்ந்தது
புகநேர்களத்தாரணவல்லியேபுன்மையீதுபுகன்றாய்புராரியாம் [வேன்
ஏகநாயகனேவந்தனைக்கெல்லாமிறைவனென்பதற் கின்னமொன்றுள

தஞ்சமானதயித்திரியத்திலிற்றுனுநிற்பச்சகலதெய்வத்தையும்
சிஞ்சுமாரப்பிரசாபதியுடல்சேருறுப்பெனச்செப்பியிச்சிரமது [வர்தம்
பஞ்சின்மெல்லடியாய்வந்தனைகளெலாம்பாத்திரன்வடிவென்றலிற்றே
புஞ்சகத்துளவந்தனைபாத்திரன்புராரியென்றுபொருட்படுமென்னவே

இனையசொல்லியவாகமமென்கொடிக்கேற்பவாரணவல்லியியம்புவாள்
அனையதன்மையில்வந்தனைபாத்திரராணதேவரநேகருண்டாகையால்
தொனிசெய்பொற்கொடியேத்துஞ்சிவனையே சொன்னதென்னப்பெ
றுதுமொன்றுமென்,சினமலர்ச்சிஞ்சுமாரற்கவன்றனைச்சென்னியெ
[ன்றுரைசெய்ததுமில்லையே. (௰௭)

செய்யவந்தனைப் பாத்திரன்றனுமாய்ச் செப்பிடுஞ்சிரச் சொற்சிஞ்சு
மாரனூர், துய்யமேலவர்தாங்கெழுத்தெட்டெனச் சொல்லலானுந் துலங்
குந்தன்மைத்தனை,மெய்யில்வீறுபுனையுமூர்த்தாவெனமேல்விளம்பிவி
வரிக்கையாலுமப், பொய்யிலாச்சிரச் சத்தமுகத்திலோர்பொருளுறுப்
[பைப்புலப்படச்சொன்னதே. (௰௮)

அன்னவன்புன்சிரவுறுப்புக்குமேலாணவுச்சிகனற்றெய்வமென்கையால்
மூன்றுனாத்தசிரவுறுப்பானவன்முக்கியப்பெயராய்மொழி யப்பெரு
ன்,இன்னகாரணத்திற்பவவல்நணக்கின்னுயிர்க்கிடமாமிதயத்தலந்
தன்னைவின்விவெனலாற்பிராணனைத்தாங்குறுப்பிற்றனுமுறுப்புள்ளதே

வஞ்சிமெல்லிடையாயிதுவன்றியேயவாய்த்தவில்லையேபுராணத்திரண்டதாம்
அஞ்சகத்தினிலீரிரண்டாகியவத்தியாயத்தரியவதாரமாய்ச்
சிஞ்சுமாரசரீரத்திருந்தும்சாதிப்பெருஞ்சக்கரஞ்செலுத்துஞ்செயல்
தஞ்சமாகச்சொலுமதனூற்சுரார்தாஞ்சரீரஞ்சரீரியச்சாங்கியே. (௨௰)

செங்கண்மாலினவதாரமாகியசிஞ்சுமாரனைச்சிந்தைசெய்வார்க்கெலாம்
தங்குவீடருடேவதையென்னவுஞ்சகலவந்தவாதாரகனென்னவும்
பொங்குசெஞ்சொற்றயித்திரியத்தினிற் புலமைகூரப் புகன்றிடற்றன்
மையால்,எங்குநாரணனேவந்தனைக்கெலாமிறைவனென்னவிவனுமியம்
[பினாள். (௨௧)

ஒன்னுதற்றிருவேயிமையோர்களையும்மதாயவுயர்ந்தவனேயெலலாம்
கண்ணுதற்குச்சமர்ப்பணஞ்செய்துநீர்காமியங்கள் கைக்கொண்டிடுமி
ரென,வெண்ணுசீர்கொளிருக்கினுமாக்கையாலேயவந்தனைக்கெல்லாமு
ரியராம்,விண்ணவர்க்குமரமேசாணியன் வேறுவந்தனைக் காரவிதித்தா
[ரென்றாள். (௨௨)

சுருதிவல்லியதுகேட்டனைசெய்வாள்சுராநோக்கித்தொலைக்கேயருதிகம
த்றாம், கருதிநீங்களுங் கட்குச்செயுநமக்காரம்யாவைவுங்கண்ணுதற்கிய
னென்,றுரைசெய்தன்மைசுருதியிலில்லையவ் வும்பரைக்குறித் துங்கட்கு
ருத்திரன்,தருவனென்றதுகாமியமன்றியே தக்கவீடருமென்றதில்லை
[யே. (௨௩)

ஆகலாற்றம்பிற்சூழ்ந்தவர்வந்தனைக்கருகராற்புதராகியதன்மைபோல
ஒதுமாபதியுஞ்சுரர்வந்தனைக்குரியனந்தவுமாபதிவந்தனைக்
கேதுபூதருமேவருளரொன்றலுமேற்றவாகமவல்லியிலங்குசீர்
வேதவல்லிமதிமுகம்பார்த்தொருவிவரமாய்மை விரித்து விளம்புவாள்.

ஈறிலாதநுதல்விழித்தேவனேயாவருக்குமிறைவனென்றல்லவோ [டில்
கூறும்வானவர்தம்முளொருததனுய்க்கூட்டிவாவெனிற்கூட்டிப்பணிந்து
ஆறணிந்தவன்சீறும்மன்றேயிருக்கதனிலேயிரண்டாமட்டகத்துளே
வேறதாகவிரித்துரைக்கின்றதம்மெய்ம்மைவாய்மையை வேறும்விளங்க
வே.(௨௫)

வாசவன்றனையங்கியைமித்திரன்வருணனைக்குருவைச்சோமனைட்புகழ்
விசுமச்சுவினித்தேவரையெலாம்வேறுவேறழைபாதழைத்தைப்புகழ்த்
திசனைத்தனிமயமழைக்குந்திறனேற்றரிசொசுச்சாகையுங்கூறலால்
பேசுபைங்கிளிமயதனிநாயகர்பேரையன்றிப்பிறித்தங்கழைக்குமோ. ()

என்னவாகமவல்லியுரைப்பமற்றிவளுநீயிங்கியம்பியமந்திரம்
தன்னிலேமகதேவனைவேறுறத்தானழைத்தவத்தன்மையுமன்றியே
மன்னுமிந்திரனீரமசேந்திரன்வருணனென்பவனாயுந்தனித்தனி
அன்னசாகைதனிலங்கழைத்தலாலவர்கடாமுமதிகர்களாவரோ. (௨௭)

பழுதிலால்குமாதங்கமாகியபாதசாத்திரப்பாணிவிகற்பினில்
அழகுநீள்சுரஞ்சேரஞ்சலியனைத்தமாருக்குமணிநுதலஞ்சலி
விழுமிதானகுரவர்க்குமார்பினின்மேவுமஞ்சலிவேதியர்கரும்மெனப்
பொழிவுகூரஞ்சலிமுத்திரையினைப்பூதலத்திற்பொறுப்படக்கூறுமே.

மற்றுமஞ்சலிமுத்திரையைச்சொலுமாவராகிதனக்குமீதன்றியே
பெற்றிடும்பிரமத்தலமூர்த்தியாய்ப்பேசுநாடகசாலையிற்பேர்பெறும்
கொற்றநான்முகனுக்குவிசேடமாய்க்கோலமானபுட்பாஞ்சலிகூறுமா
தெற்றிலோசனற்கீதுகொண்டோமினிநீள்பாத்துவநீநிச்சயித்ததே[ம்

அலங்கலோதியாய்மற்றிதுநிற்கநீடகிலபஞ்சதாளேசுரநூலினில்
நலங்கொடாளத்திருக்கோயிறன்னிலேநண்ணிவாழ்ந்திடு நாரணனென்
னவும்,துலங்குதாளத்தினிலெழுநாதமேதூயநக்கஞ்சொரூபமதென்ன
வும்,இலங்குநாதத்தினுள்ளுயிராகுவானேசிலாவந்தநாரணனென்னவும்

இனையதாளத்தெழுந்திடுநாதநல்லிசையினாலேயவற்கன்புசெய்வதும்
வனசவுந்தியினான்முகனைத்தருமாலையேமகிழ்விக்குமதென்னவும்
புனிதமாதவத்தாளநன்றுதமிப்புவனமண்டலமேலுகப்பாமெலாம்
அனகனாகியவந்தனைமாலவனருளின்முத்தியடைகுவனென்னவும் (௬௧)

ஈதலோதுமிராகப்பிரகணத்தின்பமாணவிசையின்திறமெலாம்
நாதுசேருங்கருங்குழற்றையலேசாமகானவிகற்பங்களென்னவும் [ம்
ஓதுமிப்பெருஞ்சாமச்சுருதிமாலுருவமென்னவுமுற்றவித்தன்மையா
கீதவின்பமுணர்வார்க்குமுத்திதான்கிட்டுமென்பதுங்கேழுறவோதுமே



௬-வது-வந்தனைக்குரியதாரகப்பிரமசொரூபத்தை
சிவனுபதேசித்தப்பரிச்சேதம்.

இங்குமற்றிதுநிற்கமதிப்பினாலெண்ணிலக்கமிலாவந்தனைக்கெலாம்
பங்கயத்திருநாயகனாகியபரமனேவரபாத்திரனென்னவும் [குலாய்
செங்கயற்கட்கருங்குழற்பைந்தொடிச்சிற்றிடைப்பெருந்தேர்மணியல்
மங்கலச்சொற்சிவாகமவல்லியே வகுத்துரைப்பன் மனங்கொண்டுகேட்
[டியால். (௧)

பிரமனும்மருத்தனுமீச்சுரப்பெயரினானுமெய்ப்பேர்பட்டதேவரும்
பாவுவேதமுமங்கமுஞ்சாகையும்பலபுராணமும்பானுவுஞ்சோமனும்
சுரருமேனையசுரருமாந்தருந்துவாதசாதித்தியருந்துலங்குசீர்
மருவுமட்டவசுக்களும்பன்னொருவர்க்கமானவருத்திரர்களும். (௨)

இலகுமெண்டிசைப்பாலருங்காலமுமியனுமற்றகன்றனுமியாகமும்
சலபமானமகாதேவனும்மயேச்சுரனுமீன்முதற்றோன்றவதாரமும்
நிலையினிற்பனவுந்திரிகின்றவுநிகிலவிச்சுவமுந்நியந்தாவுநீ
டலகிலக்காரணசதுக்கமுமாவியுஞ்சருவாந்தரியாமியும் (௩)

பிரணவாக்கரமுமுயர்தாரகப்பிரமமும்மறைபேசிடுமேழ்வியா
கரணமுங்கிரகங்களுந்தாரகாகணமும்யோகமுங்கண்ணெனுஞானமும்
உரியவண்டத்தினுள்ளும்புறம்புமாயுலவுவானுமொப்பாருமிக்காருமில்
அரியுமத்திருவுங்கலைவாணியுமச்சுதானந்தவிக்கிரகத்தனும். (௪)

என்னவோதுஞ்சகலமுநீயெனவேத்தியங்கமிலக்கணங்கூறவே, நன்னய
த்தினவிலும்பதந்தொறுநாட்டிநாட்டிநமோநமவென்றவச், சென்னிவ
ந்தனையெல்லாமிராமச்சந்திரனையேகுறித்துச்செய்கைவந்தனை, பன்னு
சீர்புனையும்யாச்சவற்கியோபநிடமோதிப்பரத்துவங்காட்டுமே. (௫)

அலகிலாதபெருவேள்வியின்வடிவானநாரணனையாதரத்தினால், பலபகா
ரம்பணிந்தரியேயுனைப்பணியுமிந்தப்பணிவுகளன்றியும், தலைமைகூரந்த
ரியாமியானநின்சரீரபூதர்களாய்ச்சமீபத்திலே, இலகுதேவர்க்கிறைஞ்சி
யவந்தனையெவையுநின்பொருட்டேயெய்துமென்னவே. (௬)

சீரிணங்குமெசுவேதசாகையிற்செறியுமட்டகமூன்றினிலேழதாய்
நேருநற்பருச்சத்திருமூன்றெனநின்றமேதாரனுவாகநிகழ்த்துமால்
ஏரணிந்தபிரமசொருபனுயிலகுவிண்டுவுக்கேநமவென்றுபூந்
தாரணிந்தகுழலாய்ப்பிரமமச்சத்துமந்திரந்தன்னிலுஞ்சொல்லுமே. (௭)

திகிரிமாலினவதாரமாகியசிஞ்சுமாரப்பிரசாபதிதன்னையே, சகலவந்த
னைக்கும்பாத்திரனெனத்தாரணிபோற்றுந்தயித்திரியஞ்சொலும், அகில
காரணனாகிப்பராபரனானவச்சுதனுக்குயர்வந்தனை, ககனநேரிடையாய்
மெய்ப்பொருளெல்லாங்காட்டும்பாரதகாதையிலோதுமே. (௮)

மன்னுபாகவதத்திற்றசமமாய்வாய்த்தகந்தம்வச்சாபகரணத்தில், அன்ன
வாகனன்கண்ணன்பரத்துவமடைவிலோதியடியிணைதாழ்ந்தமை, மூன்
னியோதுமுதற்பஞ்சகத்திலேமுதிரும்விண்டுபுராணமுமுத்தொழில்
தன்னைவல்லபராபரமூர்த்தியேசார்ங்கியேசரணென்றமைசாற்றுமே. ()

ஊனமாற்றுநற்பாகவதத்தினிலீரண்டாங்கந்தத்திருபத்துமூன், றுனசி
ரத்தியாயமுக்கட்சிவனன்புசேர்பிரசேதர்களுக்கொரு, தேனுலாவுபுது
மலர்ப்பொய்கையிற்செம்பொன்மால்வரைபோல்வந்துதோன்றியே
ஞானநாரணனார்தம்மகிமையைநாவினாலுபதேசித்தநாளிலே. (௰)

உலககாரணனேநமமிக்கபோதுபேர்பெறுமுத்தமனேநம
அலகிலாதுபருஞ்சருவாந்தரியாமியேநமவச்சுதனேநம
இலகுமுத்தொழிலுபகனேநமவெற்றையைத்தருமுத்தியனேநம
பலவுயிர்க்குயிராகியிருந்துமோர்பற்றிலாதபராபரனேநம. (௰௧)

மங்கலக்குணபூரணனே நமவாய்த்தமூர்த்தியளிப்பவனே நம
துங்கமேவள்விச்சொருபகனே நமசுத்தசாத்துவிதச்சொருபா நம
சங்குசக்கரபாணியனே நமசச்சிதானந்தனே நமவென்றுகொண்
டங்குநின்றுபணிந்தமையாழிசூழவனியோர்நின்றறியப்பகருமே. (௰௨)

உலகமீதுபராபரன்யாவன்மற்றோருங்குமுத்திக்குபாயசன்மார்க்கமே
துலகில்வந்தனையார்க்குரித்தாகுமோராதனைகளுரியானெவனையவென்
றிலகுமேவேற்றருமன்வீட்டினையங்கேத்துநீயிதியம்பிநற்றெனச்
சலனபுத்தியிலாதவவ்வீட்டிமன்றுன்மகிழ்ந்துசாரசயனத்திலே. (௰௩)

மூரசுயர்த்தவரேகளுலகுக்கெலாமூலகாரணனானமுகுந்தனே
பரவவேத்தநினைக்கவருச்சனைபண்ணமுக்கியபாத்திரனானவன் [ன
கருதிபூர்த்திபெறுகைக்குமற்றவக் கண்ணனல்லது கண்டதொன்றில்லெ
அநஞுறப்பகர்ந்திட்டதுபாரதத்தானுசாதனிகத்தினிலுள்ளதே. (௰௪)

மற்றிதன்றிபும்பாரதத்தொன்றுகேள்வானவழங்குமறைத்துளி நீரெலா
ம்,செற்றரங்கக்கடலினைச்சேர்வபோற்றெருகுதியான சுரரையெல்லாங்
குறித்,தூர்த்திறைஞ்சிவந்தனையாவதுமோங்கேசவனையொருமூர்த்தி
யைப்,பற்றியேயடைகின்றதெனுந்திறம்பணபுகூரப்பகர்ந்திருக்கின்
[றதே (௰௫)

அனையசொற்குப்புவனதிட்டாந்தமுண்டானதேதெனிலந்தணர்யாவரீ
க்குங்,வினையமாமனுட்டானவந்தத்திலேவேறுவேறுள விண்ணோர்களை
யெலாம்,நினைவினுவந்தனைசெய்தபின்னையிற்நீள்சுலோக நிகழ்த்திமு
டித்தலால்,வனசநாபியனேயனைத்தாகியவண்மைவந்தனைக்கும்வரபாத்தி
[ரன். (௰௬)

கருதுலோகத்தவராலுநீநமக்காரபாத்திரனென்றகறைக்களத், தொளுவ
ராலும்பணிதற்குரியவனேங்குநாரணனேயெனுமுண்மையைச், சுருதி
யாலுமுபநிடத்தாலுநீள்சொற்புராணத்தினாலுந்துலங்குசீர், மிருதியா
லுமுரைத்தனென்றனன்மென்மைதங்குமவ்வேதமடந்தையே. (௰௭)

எ-வது- மங்கலகுணப்பரிச்சேதம்.

ஆயவனினையகூறவாகமவல்லிசொல்வாள்
மாயனொருவன்றானேவந்தனைக்குரியனென்ன
நீயிதுபகர்ந்தாய்பின்னேநிறைந்தவந்தனைகட்கெல்லாம்
பாயும்வெவ்விடையினானேபாத்திரனல்லனாகில். (௧)

ஆச்சரியங்களானவறுவகைக்குணங்களோடே
சாச்சுதமாகநின்றுசகலசற்குணமும்பெற்றுப்
பூச்சியமானமேலோர்புகழ்ந்திடும்பகவற்சத்த
வாச்சியனாமோவன்றோவென்பதுவுரைத்துச்சொன்னான். (௨)

அரியமாமறைமானச்சொற்கழகுறநகைத்துயிலினே
இரவலாபரணத்தைப்பூணவிடமக்கினையந்திருந்ததென்னத்
தெருவினிற்குலாவுவாரேபோற்சிவனேயும்பகவானென்றாய்
உரைசெயப்புகுமைதன்னையுள்ளவாறறிதியென்றான். (௫)

அம்மொழியமையக்கேட்டவாகமவல்லிமுக்கட்
செம்மலையனையதேவேசிறந்திடும்பகவானென்னும்
மெய்ம்மைநாலுணக்கொப்பாகவிரித்தபின்மிகைநீசொலின
இம்மொழியுனக்கேயன்றோவென்னமேலியம்பலுற்றாய். ()

பகவனென்கின்றசொற்குப்பயன்பரிபூர்ணமான
சகலயிச்செளரியம்வீரஞ்சம்பதைகீர்த்திஞானம்
மகிமைவைராக்கியமெனுமங்கலகுணங்களிந்தத்
தகைபெறுகுணங்களைக்கன்றனக்குளதன்மைநீகேள் (௬)

அரியவிச்சுரசத்தத்தாலயிச்செளரியத்தைச்சொலலும்
விரவுசந்திரசத்தத்தால்வீரியம்விரித்துக்கூறும்
மருவுருசாருவசத்தம்வரம்பிலாஞானமாகும்
இரமைசுசிவசத்தத்தாற்கீர்த்தியைக்கிளந்துமன்றே. (௭)

மற்றுகாமாரிசத்தமதித்தவைராக்கியமோதும்
தன்னிடத்திலேட்டசத்தஞ்சம்பதைதன்னைச்சாற்றும்
இன்னசத்தத்தாலேயெண்ணியகுணங்களாறும்
கன்னிமியார்பாகனுணகண்ணுதற்குள்ளதாமே. (ஷ)

நிகழுமிக்குணங்களன்றிநியமனந்திருநிசிட்டி
தருதவம்பொறுமைசாந்தஞ்சத்தியந்தருமமென்னும்
அகணிதகுணங்களெல்லாமவனியல்பாகையாலே
பகவனென்றுரைக்குநாமம்பசுபதிதனதேயென்றான். (௮)

அளிகுலாவியகாரோதியாகமவல்லியச்சொல்
தெளிவுறவுரைத்தலோடுஞ்செழுமறைச்செல்விசொல்வாள்
வளர்மதிச்சடையினானமங்கலகுணங்களாலே
அளவிடற்கரியானென்றுமவனேயேபகவானென்றும். (௯

சுருதியிற்புராணந்தன்னிற்சொற்பிரமாணங்காட்டிக்
கருதியுத்தரித்திடாமற்கற்பனைகதைசொல்வார்போல்
உரியநாமங்கள்கொண்டேயுவமையாற்பொருளைக்கூட்டி
விரகினுலுரைத்தாலத்தைமெய்யெனக்கொள்வாருண்டோ ()

நிகழுநாமங்கள்கொண்டேநிச்சயித்துரைக்குங்காலை
திகழ்வுறுஞ்சருவனென்றுஞ்சித்தசவயிரியென்றும்
பகவனென்றும்பேர்பெற்றார்பவுத்தனுமருகன்றானும்
அகிலமேலவனைநாமிங்கறிகவொன்றெண்ணலாமோ. (௰௧)

நக்கனைப்பகவானென்றுநாட்டிநீகூட்டிவைத்த
தக்கவீச்சுரசிவாதிசகலசத்தங்களுக்கும்
முக்கியப்பொருளாந்தெய்வமுகுந்தனென்றுரைத்தேன்முன்னே
அக்கதையிங்குச்சொன்னாலவையுளோர்க்கடுத்திராதே (௰௨)

நாரணமூர்த்திதானேநவையிலாக்குணங்களாலே
பூரணனென்பதற்குப்புராணமெய்ப்பொருள்களாலும்
ஆரணமொழிகளாலுமனைத்திதிகாசத்தாலும்
ஏரணிபிரமாணங்களிசைப்பெனென்றெடுத்துக்கொண்டாள்.

உத்தமவிருக்குவேதத்துபயவட்டகத்திரண்டாம்
அத்தியாயத்தில்வர்க்கமவையிருபத்துநாலில்
வைத்தகைத்திகிரிமாயன்மங்கலகுணங்கள்வான்மீன்
எத்தனையெனக்கண்டாலுமெண்ணரிதென்றுகூறும். (௰௪)

மருக்குலாங்குழலாய்மாயன்மங்கலகுணங்களெல்லாம்
பெருக்கமேழுனியின்மீதுபிறந்தவர்பிறப்போர்நிற்போர்
திருக்கிலாவுளத்தராகித்தேரினுமுடியாதென்ன
இருக்குவேதத்துவேறுமிலைபத்திடவிசைக்குமன்றே. (௰௫)

விண்டுவினுடைமையானவீரியகுணங்களெண்ணிக்
கண்டிடத்துணிதல்பாரிற்கழிதுகள்கணக்கிட்டேற்றிக்
கொண்டிடலொக்குமென்னக்குறித்தெசுவேதத்தாதி
பண்டைக்காண்டத்திரண்டாம்பருச்சத்திற்பகருமாதோ. ()

பாவமுஞ்சிறையுந்துன்பும்பசியுமில்லாதானென்றும்
கோவைமங்கலங்களானகுணமெலாமுடையனென்றும்
தாவுமிக்குணங்களெல்லாந்தற்சுபாவத்தனென்றும்
மேவுசாவித்தைதன்னில்விண்டுவைப்புகழுமன்றே. (௰௭)

இருமையேழுலகுபோற்றுமிராமச்சந்திரப்பிரானை
அரியுலாங்குழலாய்நாற்பத்தாறுகால்வேறுவேறு
மருவுமந்திரங்கடோறும்வகையுறப்பகருமென்று
பாவுசீர்யாச்சவர்க்கவபநிடம்பகருமன்றே. (௰௮)

கணிதமில்குணங்களெல்லாங்கண்ணனுக்குளதென்றெண்ணித்
துணிபவர்மூத்தவொன்றுஞ்சுபாலனேபநிடதஞ்சொல்லும்
மணியெனத்துலங்குமேனிமாயனைப்பகவானென்று
பணிதிகழ்கின்றகெற்போபநிடதமும்பகருமன்றே. (௰௯)

அகிலெல்லாமணைத்தகொங்கையன்னமேயதனுக்கேற்க
மகரவாருதியினுள்ளமணலெலாமெண்ணினாலும்
திகழுநற்கமலநாபன்திவ்வியகுணங்களெல்லாம்
தொகையிடற்கரியவென்றுசொல்லுமச்சியபுராணம். (௨௰)

விற்றொடுத்தொருவன்வானில்விட்டவெஞ்சரமவ்வானில்
சற்றிடமின்றியேகச்சத்தியற்றழியுமாபோல்
கற்றவர்தாமுமான்மங்கலகுணங்களைத்தம்புந்திக்
குற்றனபுகழ்வவொன்னவுளாத்திடும்விண்டுதன்மம். (௨௧)

செங்கண்மாயவனேயுன்றன்றிருவவதாரத்தோன்றின்
மங்கலகுணங்களெல்லாமணல்பனித்திவலைவான்மீன்
இங்கிவையெண்ணினாலுமெண்ணமாட்டார்களெஞ்சில்
சங்கையற்றவரும்பன்னாடாங்கணக்கிடினுமென்றே (௨௨)

பையவாரணத்தான்வச்சாபகரணஞ்செய்துமீள
வையமேல்வந்துபாதம்வணங்கிவாழ்த்தியதோர்வாய்மை
செய்யபாகவதத்தென்னுந்தெசமகந்தத்திற்சீரார்
ஐயிரண்டுடனேநாலாமத்தியாயத்திலுண்டே. (௨௩)

சகலமங்கலங்களானசற்குணராசியாலே
அகணிதனாயினேனுமணிமையேமுதலெட்டான
தொகுமயிச்சொரியத்தானுஞ்சுத்தசாத்துவிதத்தானும்
பகவனுமுடிவிலானும்பாம்பணைப்பரமனென்றே. (௨௪)

சத்திரயாகஞ்செய்நாட்சரசொதிநதியின்றீரம்
நித்தராமுனிவரெல்லாநிருபணஞ்செய்ததன்மை
பத்ததாங்கந்தத்தேயெண்பத்துநாலாகிநின்ற
மெய்த்தசிரத்தியாயம்பிருகுவிஞ்ஞானத்துண்டே. (௨௫)

அன்னகந்தத்திலெண்பத்தைந்ததாமத்தியாயம்
தன்னிலச்சுருதிபோற்றத்தலைமத்தகீதையினின்மாலைப்
பன்னுநற்குணங்களாலேபரிமிதத்தானிலானாய்
மன்னுசீர்ப்பகவானேமாமுகில்வண்ணன்றானேயென்றும்.

பங்கயன்முதலினோரைப்பகுதிசம்பந்தராக்கி
அங்கெலாமுறைத்துபற்றற்றணிமைமேயமுதலாமட்டம்
மங்கலைச்சூரிய - கிவாழ்கின்றாய்வாழியென்றே
பொங்குநால்வேதந்தானேபுலப்படப்புகழ்ந்ததுண்டோ.()

மதுமலருந்தியானைமங்கலகுணங்கட்கெல்லாம்
பதியெனப்போற்றிவச்சாபகரணஞ்செய்தநாளில்
சதுமுகன்பகர்ந்தநன்மைத்தலத்தினிற்சாற்றுமன்றோ
பதுமமாம்புராணத்துடைம்பத்தொன்றுமத்தியாயம்(௨௭)

திவ்வியகுணங்களாறின்றிறத்தினைவிரித்துக்கூறின்
ஆவ்வகைக்குணத்தான்மிககாலைச்சுதனவனேயன்றி
மெய்வழிப்பகவானவான்வேறினியிலையென்று
செவ்வியோர்புகழுநற்புதத்தினியசங்கிதையுஞ்செப்பும். ௨௯

சாண்டிலயிருடிபுங்கஞ்சாந்தமாமுனிவர்ஞானம்
நாடலினையேப்பராணந்துருவருக்குபதேசித்தல்
காண்டுபிடத்துநிதிக்காசிபாதிதிக்கோதும்
பாண்டவர்காலதயானடஞ்சமவேதத்துள்ளும். (௩௰)

துரியமந்திரமாச்சொல்லுந்துவாதசாக்கரமதான
பிரமவித்தையினின்மேலோர்பேசிடும்பகவனுமம்
புருடவுத்தமனுமாலேபொதுவறவுடையானென்று
பரிவுறச்சகலமேலாகம்பாடமாய்ப்பகருமாதோ. (௩௧)

அந்தமின்ஞானஞ்சத்தியதிகயிச்சொரியம்வீரம்
முற்றியபலந்தேசெல்லாமுகுந்தனுக்கேயுண்டென்றும்
மந்திரசாதரிரத்தின்மாவிலக்குமியதான
தந்திரப்பகரணந்தான்றகவுறச்சாற்றுமன்றே. (௩௨)

செம்மமாரணங்களென்னுந்திக்குணமில்லாதானும்
நன்மையாங்குணமுள்ளானுநாரணன்றானேயென்றும்
தொன்மையாம்பிரமாண்டத்திற்சொல்லுமத்துலங்குமாலை
வான்மிகராமநாலுமங்கலகுணத்தானென்றும். (௩௩)

மிகநிம்பமஞானவிருத்தர்களெனக்குமுன்னாள்
ஒக்கநற்குணங்களெல்லாமுடையவன்மாலேயென்றார்
அக்குணமுடையமாலிவ்வசோதைநந்தனனேயென்ற
தங்கவீடுமன்சொல்பாரதச்சபாபருவஞ்சாற்றும். (௩௪)

அனைத்துலகத்துளோருமநேகமாயிரகாலங்கள்
நினைதிருந்தெண்ணிலு நீள்கடற்றுயிலுமாயன்
கனைத்தமங்கலகுணங்கள்கணக்கிடமுடியாவென்றும்
பனைத்தடக்கொடியான்வேதபாரதத்துரைத்தானன்றே()

சதுமுகப்பிரானைப்போலத்தலைமூத்தவாணூறுங்கோடி
வதனமண்டலமுநாவுமாச்சரியமிலாநெஞ்சம்
சிதைவறப்படைத்தபோதுஞ்செஞ்சுடர்த்திகிரிமாலே
தலைவுறநிறைந்தவுன்றன்சகலமங்கலகுணத்தில். (௫௧)

பல்பதினாயிரத்தோர்பாகமாத்திரத்தைத்தானும்
சொல்பவருளரோவென்றேதுதித்தானுரைத்தமாற்றம்
வெல்பொருள்வராகந்தன்னில்விரவியவெழுபத்தைந்தாய்ச்
செல்வுழியத்தியாயந்தெளிவுறச்செப்புமன்றே. (௫௨)

---

௮-வது-பகவற்சத்தார்த்த விவரணபரிச்சேதம்.

புருடனென்கின்றபேரும்பொங்குசீர்ப்பகவானென்ன
மருவியேநின்றபேரும்வாசுதேவனேயென்றும்
பரவுமப்பகவற்சத்தப்பதப்பொருள்ஞானஞ்சத்தி
விரவியபலமேகீர்த்திவீரியமயிச்சொரீயம். (௧)

சொன்னவிக்குணங்களெல்லாந்துளவமாறபவேயென்றும்
பன்னுமத்துளவமாலேபழிக்குணமிலாதானென்றும்
அன்னவனல்லாதாரையனுமத்திடும்பகவனாமம்
பன்னுபசாரமென்றும்பராசரபுராணங்கூறும். (௨)

சுருதிகளின்னவாறுசொல்லியசொல்லினாலும்
மிருதிகளதனுக்கேற்பவிளம்பியவிபரத்தாலும்
சுருதியபுராணமெல்லாங்கழறுகட்டுரையினாலும்
பெரிதிதிகாசத்தாலேபெறும்பிரமாணத்தாலும். (௩)

பகவற்சம்பந்தமென்றும்பரமபாகவதரென்றும்
இசைமுற்றபகவற்கீதையென்றும்பாகவதமென்றும்
தகவுற்றதிகிரிமாயன்சம்பிரதாயந்தன்னைப்
புகல்வுற்றுவழங்குகின்றபுவனதிட்டாந்தத்தாலும். (௪)

பகவனென்கின்றநாமம்பையந்துழாய்மாயனுக்கே
மிகுமசாதாரணப்பேர்மேருவில்லிலைச்சொற்றாலும்
அகிலமேற்பரிதிசோமனக்கினியாதியாமாத் [ன்றாள்.
தொகைபெறச்சொன்னவாபோற் சொலிய தன்மைதெ

பரமார்த்தப்படலமுற்றும்-ஆக திருவிருத்தம்-௨௱௫.

## ௨-வது-உபாசனைப்படலம்.

### ௧-வது-சிவவுபாசனைப்பரிச்சேதம்.

ஆரணவல்லியவ்வாறறையவாகமத்துமாறு
சீரணிபகவற்சதத்தஞ்செநுகண்மாருமமங்கில்
வாரணிபுலையாயந்தமாயவணிருக்கவாமத்
தோரணங்கனையேவேதமுவாசனைசொலுமேமாவென்றாள். (௧)

மற்றவாசகத்தைக்கேட்டமாமறைமயிலுஞ்சங்கை
உற்றவர்சடையிறைனையுவாசியமெனனெவேதம்
சொற்றதுமுளம்தயாருற்றோன்றவுத்தரிதநிபாயின்
வெற்றியுநனதேயந்தவிடையமேனையாநுமென்றாள். (௨)

ஆகமவல்லியச்சொற்கேட்கிழ்ந்தரனைத்தானே
ஓங்கைகூரியனறசமெல்லமுவாசியமென்றதன்மை
நிருதிகளெனருமறநிசழ்த்துமெனநனையெல்லாம்
காளகனைகளமின்னேனகனடனஞ்செய்தியாகில். (௩)

கல்வியுமுனதேகேள்விகருத்துமுனதேசொல்லும்
சொல்லுமைப்புனதேஞானத்துணிவுமுன்றனதேபின்னை
வெல்வினையுனதேயுங்கள்விளைவும்பரனேயென்றாப்
பல்விதபிரமாணத்தின்பயனெல்லாம்பகராநிற்றாள். (௪)

வேறு.

உன்றுசாகைகள்பலவினுமுபநிடங்களினும்
சொன்னதேகியவுபாசியவத்துவைத்துணிவால்
இன்னதன்மையனென்றெடுத்தேயிசைவிக்கும்
தன்னைநேரிலாநாரணவுபநிடந்தன்னில். (௫)

மூதுணர்ந்தபேர்புகழுநுவாகமோர்மூன்றில்
ஆதியாமநுவாகத்திலன்பருக்கெல்லாம்
தீதின்முத்தியையளிப்பவனென்னவுஞ்செகத்துக்
கோதுகாரணனென்னவுமொருவனையுரைத்து. (௬)

ஆமவன்றனைப்பிரணவவாச்சியனென
மாமகேச்சுரனென்றுபேர்வெளிப்படவருத்துத்
தாமமார்குழற்கறையலேயன்னவன்றனக்கே
தோமிலாவுவாசத்துவஞ்சொல்லுகையாலும். (௭)

மூன்றுரைத்தசொற்கேற்பமூன்றுமநுவாகம்
தன்னிலந்தநீபாசியன்றன்சொருபத்தை
மன்னுகிட்டிணபிங்கலன்மாவிருபாக்கன்
என்னவிப்படிநிச்சயித்தியம்புகையாலும். (௮)

சடையுமாதியுங்கண்ணுதலுபாசியனெனலால்
நடுவதாமநுவாகமேமுதியிந்நாரணனை
நெறியியத்திறனுபாசகனெனநிகழ்த்தி
அடைவில்லாப்பொருள்கொண்டிடம்வண்மைகையாலும்( )

தனுமுவாசகனுநாராயணன்றன்னை
யிருபாத்துவனென்றதில்விளம்பியதெல்லாம்
மங்கையாளவம்மங்கச்சுரனயிகபாவனையால்
அகல்விழிசசியேயத்தனையாகையினாலும். (௰)

அரியவீச்சுரனயிக்கபாவனையினலரியைப்
பரனெனுஞ்சொலும்பகர்ந்திடப்படலிகருமேயோவென்
மருவுமந்திரவாதிபர்கருடபாவனையால [னின
கருடனுவனுகாட்டலாமாகையினாலும். (௰௧)

அன்றியும்மவையறிந்திடுமுபநிடக்கருத்து
வென்றியீச்சுரனுபாசனையாவரும்விருப்பத்
துன்றுசீர்ப்பாதத்துவந்துதிபரமதாய்ச்சொன்ன
தென்றுமோர்பொருளியம்புகைக்கிசைகையினாலும்( )

இன்னதன்மைகணிற்பநாரணனைமுன்னியம்பி
அன்னதற்குமேலம்புயங்கோசமாமிதயம்
வன்னிமத்திமத்திற்பரமாத்துமாவைகும்
என்னவிப்படித்தெளிவுறவிளம்புகையாலும் (௰௩)

அனையதாமிதயத்தைநாராயணன்றனதே
எனமொழிந்திடாதிருக்கினுநியாயத்தினியல்பால்
புனிதநாரணனிதயமென்றேபொருள்கொள்கை
இனிமையாயுசிதம்பெறவிசைகையினாலும். (௰௪)

பாண்டுமைந்தனைப்பார்த்தனைப்பார்த்துநானுனக்கு
நீண்டருளனந்தனைத்திரமளித்தவெனலின்னைத
தூண்டுகின்றவென்னுடையவீச்சுவரபாவனையைக்
காண்டியென்றுதன்வாக்கினாற்கழறுகையாலும். (௰௫)

பாணிகர்த்தசொல்லாலுபர்நாரணோபநிடம்
ஈனமற்றசங்கரனையேயுபாசியனெனவும்
ஞானவச்சுதனுபாசகனென்னவுநாட்டித்
தானுணர்த்ததுதாணிம்மனிச்சயந்தானே. (௰௬)

சிற்றைகூறுமவ்வுபநிடந்திங்கள்வேணியற்கே
முந்துபாசியதத்துவமொழிந்ததேயானால்
அந்தமேலவனேபிரமாவவனேசீர்
இந்திரன்றனையுஞ்சிவனென்னுமோவென்னில். (௰௭)

புவனம்யாவையும்படைத்தளித்தழிப்பதுபுணர்ப்பாம்
அவர்கண்மூவரிலொருவகைத்தொழிற்கதிகாரச்
சிவனெனும்பெயர்படைத்துயிரனைத்தையுஞ்செருக்கும்
அவனையேயர்தத்தோத்திரஞ்செய்ததத்தனையே (௰௮)

ஆனபோதுநாராயணன்றன்னையுமவனென்
றேதவின்றிடவேண்டியுமிருக்குமேயென்னில்
மேனிகழ்ந்துடனேப்ரமாக்கரவியன்சொல்
தானிருகலைகயிலுலதுநாராணன்றானே. (௰௯)

ஈதலாதுநாரணன்றனைவிச்சுவமென்றும்
தீதில்வேள்வியென்றுஞ்சொன்னவேதங்கள்சிவனைக்
கோதில்வேள்வியின்பதியென்றுங்கூறும்விச்சுவத்தின்
நாதனென்றுமங்கவனையேபரத்துவநாட்டும். (௨௰)

சீதரன்றனைத்திகழ்வயிட்டிணவதந்திரத்தில்
ஏதமாகியபகுதியென்றிருக்கையினாலே
ஓதுவேதங்கணிமித்தகாரணனென்றவொருவன்
மாதுபாகனேயென்பதுநிச்சயவழக்கே. (௨௧)

அச்சுதப்பெயரானையுஞ்சிறந்தவாரணங்கள்
விச்சுவப்பதியென்னவும்வேள்விகட்கெல்லாம்
நிச்சயித்திடுமதிபதியென்னவுநிகழ்த்தி
உச்சரித்தசொல்லோர்த்திடும்பொழுதுபசாரம். (௨௨)

தகைமையாளுபர்சங்கரமூர்த்தியைத்தானும்
மகிமைவேதங்கள்விச்சுவமென்றிடும்வாய்மை
அகிலலோககாரணனவனென்கையினாலே
புகலுகின்றதத்தனையிதுபுதுமையொன்றன்றே. (௨௩)

கன்னிபாகனதுபாசனைபகர்ந்தசாகைக்குப்
பன்னுநாராயணோபநிடமென்றேபெயர்பவித்த
தென்னினாரணவிருடிமுன்காண்கையாலன்றி
அன்னவன்றனைப்பரத்துவநாட்டியதன்றே. (௨௪)

இருந்தவஞ்செழுத்திருத்தலாற்சதவுருத்திரியம்
பொருந்துமேன்மையாலவிளங்கியதன்மையேபோல
பிருந்தைமானும்பஞ்சப்பிரமமும்பொருந்திடலால்
விரிந்தநாராயணோபநிடமும்விளங்கியதன்றே. (௨௫)

விரித்தவிந்தநாராயணோபநிடத்தில்வேதா
உருத்திரன்வயிற்பிறந்தமையோதுகையாலே
திருத்தமானவத்திகிரிசங்கரந்தமைச்செங்கை
தரித்தமாலிடைப்பிறந்தனனென்றிடத்தகாதே. (௨௬)

பெயர்ந்துபோயதோர்கற்பபேதந்தனிற்பிரமன்
புயங்கசாயிதேகத்திடைவாக்கினாற்புகுந்து
மயங்கியேபுறப்படவழிகாணகிலாமையினால்
வியந்துமான்மலர்நாபியாற்புறப்பட்டுவிட்டான். ௨௭

ஆதலாலயன்கமலசம்பவப்பெயர்க்கமைந்தான்
போதில்வாழ்பவனகத்தின்மாயனும்புகுந்து
வாதுவென்றதோர்பிலத்துவாரத்தில்வந்ததனால்
தீதிலாவதோக்கசனெனும்பெயரினாற்சிறந்தான். ௨௮

தகுதியாமவரிருவருஞ்சரீரங்கண்மாறிப்
புகுதியும்புறப்பாடுமேயலைதுபுணர்ப்பால்
திகழொருத்தருக்கொருத்தர்சென்மித்தவாரல்லால்
பகருருத்திரனிடத்திருவோருமுற்பவித்தார். (௨௯)

ஓதலாஞ்சிவாகமத்தினில்விளம்பியதிவ்வா
றோதுசொற்கிசைந்திடவானுபயவுருவினும்
வேதனுந்திறல்விண்டுவும்பிறந்ததுவிரித்து
போதம்மேற்கொளவியம்பியதிலிங்கமாபுராணம். (௩௰)

நிறைந்தலோகமுநிற்பவுந்திரிவவுமெல்லாம்
இறந்தகாலமுமிறந்திடாவிந்துவேணியனைச்
சிறந்ததாமரைத்தவிசிடைத்திசைமுகனிடத்தில்
பிறந்ததாகவும்பிதற்றுவாரறிகிலாப்பேய்கள். (௩௧)

இருந்துநெஞ்சமுங்கண்டமும்பிரமரந்திரமும்
பொருந்துநாவுநன்புருவநன்னெறியுமெப்பொழுதும்
இருந்தயோகியர்க்கீறிலாவீச்சுரன்றோற்றந்
தருந்தியானமாத்தலமெனயோகநூல்சாற்றும். (௩௨)

ஆகையாலயன்புருடோநன்னெறியிலவ்வமலன்
யோகசாத்திரமுறைமையாற்றோன்றியதுளதே
பாருசேர்மொழியனப்பலசொலியும்பயனென்
னகைகூரரிக்குமாபதியுபாசியனென்றாள். (௧௩)

---

## ௨-வது-சிவவுபாசனைமறுப்புப்பரிச்சேதம்.

அங்கயற்கண்ணுமாமயிலுரைத்தவம்மொழியைக்
குங்குமத்தனவாரணக்கொடிமனங்கொள்ளாக்
கங்கணங்கலுங்பாலின்கலின்கலினைகதறக்கட்
பங்கயங்களைக்கொட்டிச்சிரித்திவையிவைபகர்வாள். (௧)

படைத்தகாணியாய்த்தலைமகனுமோர்பதியைக்
கடைத்தொழிற்சிலர்சுதந்தரஞ்சொலுங்கதையதுபோல்
அடுத்தமால்பரமானகாரணவுபநிடதத்தைப்
பிடித்துநீயிங்ஙனெனப்பிணங்கினைச்சிவபிரானே. (௨)

தேன்றருக்குழற்சேயிழையேயிதுநிற்ப
என்றுகொணர்ந்நீயிந்துசேகரனுபாசனையை
ஆன்றசெஞ்சொனாராயணவுபநிடத்தாலே
தோன்றவுத்தரிக்கின்றனெனென்றுமுன்சொல்லி. (௩)

உன்றனுக்கிபின்கற்பிதமாய்ச்சிலவுரைத்தும்
என்றும்வேதவிருத்தமென்றிகழ்ந்தசொற்களிலே
பின்னையுஞ்சிலகூட்டியும்போதிவாளர்
அன்றிநின்றவராகிலுமதிப்பதொன்பதற்காய். (௪)

இனையசொற்சிலசொல்லினையிங்கிதுநிற்பப்.
பனிமலர்க்குழலாயுபர்நாரணோபநிடம்
புனிதநாரணனுபாசனைபுகன்றதெனபதற்கும்
அனகனுமந்நாரணன்றன்னையர்ச்சித்து. (௫)

முன்புசங்கரன்மகத்துவம்பெற்றுளமுறைக்கும்
அன்பருமயன்சிவன்முதலாயினோர்க்கெல்லாம்
துன்பமற்றமாலிடத்திலேதோற்றமோடொடுக்கம்
என்பதற்கியானியம்புவல்கேள்பிரமாணம். (௬)

தலாயில்பாதொருசத்தமும்பொருள்கொளுமிடத்துப்
பெரிதுபக்கிரமோபசங்காரமப்பியாசம்
மருவபூருவம்பலம்புகழென்றறுவகையாய்
விரிதிபாயநிச்சயத்தினாற்பொருள்கொளல்வேண்டும். (௭)

அடைவுசேரநுவாகங்களறுபத்துநான்கும்
உடையதானாராயணவுபநிடந்தன்னை
இடையின்மூன்றநுவாகமாத்திரமெடுத்திசைத்த
படிபொருட்கொளினுலகசம்மதமெனப்படுமோ. (அ)

உரைத்தநாரணவுபநிடத்துபக்கிரமத்தும்
நிரைத்தமுன்னநுவாகத்துநீள்கடற்றுயில்வும்
பெருத்தகாரணத்துவமுந்தனிற்பெரியோர்
ஒருத்தரின்மையும்படைத்தவனொருத்தனையுரைத்து. (கூ)

வாய்த்தவாகமவல்லியேமற்றவன்றனையே
ஏதுமுத்திமையத்தருபவனென்னவுமுரைத்துப்
பூதநாயிநாராயணன்றன்னையப்புருட
சூத்திரஞ்சொன்னவனைத்திறற்சிலசொல்லி. (ய)

வைத்தவிம்முதலாமநுவாகத்தின்மேலே
இத்துடன்கலந்தோதுகவெனச்சொலியிருந்த
உத்தரத்துநாராயணவுபாநுவாகத்
தத்தினிற்றிசைமுகனுறையுகரமென்றதற்பின். (யக)

கோலமாமலராசனத்துறையிலக்குமியும்
சேலையாகவேழ்கடலையுமுடுத்தமேதினியும்
ஏலுமிங்கிவரிரவொடுபகலவனிரண்டு
பாலும்வாழ்ந்திடுபத்தினிமாரெனப்பகர்ந்து. (யஉ)

ஆரணத்திசைத்தவன்றனையயிர்த்திடாவண்ணம்
சாருமத்திமயாமநுவாகங்கடமிலே
நாரணப்பெயர்பதந்தொறும்பதந்தொறுநாட்டி
நேரிலாப்பரதத்துவமென்றுநிச்சயித்து. (யங)

அந்தயாமநுவாகமெய்வாய்மையினலும்
முந்துநாரணன்றன்னையேசொலிமுடித்திடலால்
பந்திசேரளகப்பெயானேநாரணோபநிடம்
இந்துமோலியனுபாசனைசொல்லியதிலையே. (யச)

மூழ்ச்சமத்தமையார்முதற்சாலுழாமுன்னம்
தழைத்தசெட்டியின்முன்றுவியசாலுழுவார்போல்
இழைத்தவாதியுமர்தமுங்கிடக்கதீயிடையே
சுழிதெடுத்தபூவனையநுவாகமுந்தொகையும். (யரு)

உங்கள்சந்திரசேகரனுருபாசனையைத்
துங்கவாகமவல்லியேசொல்லியதில்லை
பொங்குமந்த்ரமூவகையதுவாகமெய்ப்பொருளைச்
சங்கைதீர்ந்திடவிளம்புவனியதனைக்கேள். (௰௬)

—••●••—

## ௩-வது- உபாசியனிருணயப்பரிச்சேதம்.

அந்தமூன்றினிலாதியதாமநுவாகத்
துந்தும்மதையாலுபாசியனென்னநீயுணர்த்த
முந்துசீர்புனைமகேச்சுரனென்கின்றமூர்த்தி
இந்துசேகரனன்றலதெங்ஙனேயென்னில். (௧)

அவ்விடத்தினிற்பிரணவத்தாதியாயமர்ந்த
திவ்வியாகரமானதோரகாரவாச்சியனைக்
கவ்வைதீர்ந்திடமகேச்சுரனென்றகட்டுரையால்
மவ்வலோதியாயகாரவாச்சியன்திருமாலே. (௨)

மற்றதெப்படியென்னின்வேதங்களுமகிமை
உற்றசாத்திரபுராணமுமிருதியுள்ளவையும்
பற்றிலாதநாராயணமூர்த்தியாம்பரனே
வெற்றிவேற்றுருபகாரவாச்சியனெனவிளம்பும். (௩)

சக்கரந்தவிர்ந்தக்கரந்தனுருவுகோறனைக்கொண்
டுக்கிரப்பரித்தேர்கடாவியமுகிலொருவன்
அக்கரங்களிலகாரநானென்றருச்சுனற்கு
மிக்குரைத்தனன்பாரதகீதையில்விளங்க. (௪)

திருத்தமாகியசங்கமுந்திகிரியுங்கரத்தில்
தரித்தமாயனையகாரவாச்சியனென்றதன்மை
வரைத்தடஞ்சிலையாற்புரமெரித்தவன்வாக்கால்
உரைத்தராமசகத்திரநாமத்துமுவதே. (௫)

அன்னதன்றியேபிரணவவாச்சியனுவான்
சொன்னவம்மகேச்சுரனெனத்துணிந்திடுமிடத்தும்
தன்னைநேரிலாப்பிரணவவாச்சியத்தாலும்
என்னையாளுநாரணனிதற்கையமொன்றிலையே. (௬)

இக்கிதற்குரைத்திடும்பிரமாணங்களினிக்கேள்
செங்கயற்கணுமையினையதருவசிரத்தில்
பொங்குசீர்புனைபிரணவம்பூருவமாகத்
துங்கமானவட்டாக்கரத்தொகுதியுஞ்சொல்லி. (௭)

பேசுகின்றவப்பிரணவவாக்கியஞானை
தேசுகூருமந்நாரணன்றனையுபாசிப்பார்
ஆசிலாதவைகுந்தநாடடைகுவரொன்று
நூசுமேசிலடையாயடையாளமாய்ச்சொல்லும் (௮)

சனனமாரணந்தவிர்த்திடுமிராமச்சந்திரனை
இனிமையாகியபிரணவவாச்சியனென்று
தனைநிகர்ப்பதொன்றின்றியதாரகப்பிரமோ
பநிடமோதியவாசகமூலமெலாம்பாடம். (௯)

விரிசுபாலமாமூபநிடத்தாலும்விண்டுவையே
பிரணவத்தினாற்சொலப்படும்பொருளெனப்பேசும்
இருமையானவிம்மறைகள்சொல்லியமொழிக்கிப்பால்
பாவுசொற்பலபுராணமும்பகர்த்திடும்படிகேள். (௰)

சீதான்றனைப்பிரணவச்செழும்பொருளென்றும்
ஓதுமாத்துமமென்றுமவ்விரணியற்குதித்தோன்
மேதையாலுரைத்ததுசொலும்விண்டுவின்புராணத்
தாதியஞ்சகத்தெண்ணிரண்டாயவத்தியாயம். (௰௧)

எஞ்சலின்றியவிப்புராணத்தினிரண்டாம்
அஞ்சகத்திருநாலதாமத்தியாயத்தில்
வஞ்சிசூரியமண்டலமத்திமத்துறைவான்
விஞ்சம்மன்மைநாராயணனென்பதுவிளம்பி. (௰௨)

அந்தநாரணன்பிரணவப்பொருளெனுமடைவும்
சிந்தையாவருந்தெளிவுறப்பிரமமாய்ச்செப்பும்
இந்தமட்டுமன்றிதற்குமேலானவஞ்சகத்தில்
வந்தமூன்றதாமத்தியாயத்துவாய்மையிலே. (௰௩)

மறைபிரித்தவாறெப்படியெனமயித்திரேயர்
அறிவுடைப்பராசரர்தமைக்கேட்பமற்றவரும்
முறைமுறைப்படிவியாதபட்டத்துமுன்னிருந்தோர்
எறிகடற்றலத்திருபதோடெண்மருண்டென்றும். (௰௪)

இவ்வியாதர்பின்வியாதபட்டந்தனக்கிருப்பார்
தவ்வலின்றிமேவச்சுவத்தாமனுமொன்றும்
அவ்வவ்வேதியர்துவாபராந்தந்தொறுமுண்டவே
இவ்வியப்புகழ்மறைத்துறைசெய்வர்களென்றும். (௰௫)

இருநிலத்தினின்மறையெலாமிறந்தகாலத்தில்
பிரணவத்துமட்டேநிலைபெற்றிடுமென்றும்
அருமையுற்றவப்பிரணவவக்கரந்தானே
பரவுலோகவுற்பத்தியதாம்பொருளென்றும். (௰௬)

இத்திறம்பெறும்பிரணவப்பொருளதாயிருப்பான்
நித்தனாகியநாரணனென்னநிச்சயித்துப்
புத்திபண்ணுதிநீயெனவிவையெலாம்புகன்றார்
சித்தமப்படியேமயித்திரேயருந்தெளிந்தார். (௰௭)

பன்னுபாரதகீதையிற்பிரணவப்பயனும்
என்னைநீநினையென்றுபார்த்தனுக்கரியிசைத்தான்
கன்னியாகனும்பிரணவப்பொருள்கண்ணனென்று
சொன்னசொற்பிரமாண்டமாம்புராணமுஞ்சொல்லும். (௰௮)

எட்டெழுத்திலொன்றாகியபிரணவவெழுத்தின்
திட்டமெய்ப்பொருளரியெனச்சுகமுனிதெளிந்து
பட்டபத்திரனும்பரிக்கித்துபூபதிக்குக்
கட்டுரைத்தமைவிளம்பிடுநீள்பாகவதம். (௰௯)

மாசிலாதசீர்ப்பிரணவமாதியாய்வைத்துப்
பேசிடுந்துவாதசாக்கரப்பிரமவித்தையினும்
தேசமேவிடுசகலருந்தெளிந்திடச்செப்பும்
வீசபாரதகதையுடன்விண்டுவின்புராணம். (௨௰)

கண்ணுதற்சிவன்முனிவர்க்குக்கண்ணனைக்காட்டி
எண்ணுசீர்ப்பிரணவப்பொருளாகியவிவனை
நண்ணிமுத்தியைச்சேருதிரென்றமைநாட்டும்
மண்ணின்மேனிகழ்பாரதார்த்தத்தரிவங்கிசம். (௨௧)

முந்துசீர்ப்பிரணவப்பொருளரியெனமொழிந்தான்
இந்திரப்பெயரவனைவெளிபெறவியம்பும்
அந்தமானவைம்பத்தொன்றாமத்தியாயத்துப்
புத்திகூரியோர்புகழ்ந்திடும்பதுமமாம்புராணம். (௨௨)

வண்டுழாயணியுஞ்சுடர்மவுலிமாதவனே
எண்டகும்பிரணவத்தினிற்பெறுபொருளென்று
புண்டரீகர்நாரதரிவர்புகன்றவாதரத்தில்
கண்டுகொள்ளுமாறுரைசெயும்பாரதகதை; (௨௩)

இளங்கலாபமாமயிலனுயிங்கிதற்கெல்லாம்
துளங்குசீர்புனைபுவனதிட்டாந்தமுந்தோன்ற
வளங்குலாவுநீடணிபரங்கத்துமாயனுக்கு
விளங்குகின்றதுபிரணவாகாரமாம்விமானம். (௨௪)

பிரணவப்பொருளரியெனும்பெருமைநீயறிய
ஒருதொடைப்படச்சிலபிரமாணநானுரைத்தேன்
சுரிகருங்குழற்றேவகையேவம்மகேச்சுரனும்
தருணவெண்பிறைசூடியன்றச்சுதன்றானே. (௨௫)

அச்சுதப்பெயராலுயரற்புதன்றனையே
வைச்சசீர்புனைமகேச்சுரனென்னுநாமத்தால்
உச்சரித்தெடுத்தோதிநிகிலசம்மதமாய்
நிச்சயித்ததுகர்ப்பமாகியவுபநிடமே. (௨௬)

வாய்த்தசீர்ப்பதுமந்தனில்வாசுதேவனைமுன்
தோத்திரஞ்செயுஞ்சகத்திரப்பேர்த்தொகுதியினும்
கீர்த்தியைம்முகனிரணியகெர்ப்பசங்கிதையில்
ஏத்தியோதியவிராமநாமங்களாயிரத்தும். (௨௭)

தாமவேல்விறல்வீட்டுமர்பாரதந்தனிலே
சேமமாகவேயோதுநாமச்சகத்திரத்தும்
வாமமேகலைபல்குலாய்மகேச்சுரனென்றும்
நாமதேயநாராயணன்றன்னதாய்நவிலும். (௨௮)

சுடர்குலாவுசீர்நேமிமாலேமகேச்சுரனென்
றிடியுலாங்கொடியிந்திரன்றுதித்தவாறியம்பும்
படியுளோரெலாம்புகழ்ந்திடுபதுமமாபுராணத்
தடைவதானவைம்பத்தொன்றாமத்தியாயத்தில். (௨௯)

தருமகேச்சுரநாமதேயத்தினைத்தானீ
டகிலமீதறியார்களுஞ்ஞானியரேனும்
திகிரிமாதவன்றனஞ்சயற்கோருபதேசம்
பகருநீடிதிகாசமாம்பாரதகீதை. (௩௰)

அலங்கலோதியாய்மற்றுமக்கீதையிலஞ்சாம்
புலன்குவிந்துளயோகநூல்புகன்றிடுமிடத்தில்
துலங்குசங்குசக்கரத்தையாயுதமகேச்சுரனை
இலங்குறன்னறிவாற்றியானிக்கவென்றிருக்கும். (௩௧)

ஏற்றுவாகனன்வாணனுக்காகவந்தெதிர்த்துத்
தோற்றநாண்முகுந்தனைமகேச்சுரனென்றுரைத்த
மாற்றமைம்பதோடஞ்சதாய்வழங்குமத்தியாயத்
தாற்றமாய்ச்சொலும்பதுமோத்தரகாண்டம். (௯௨)

சொற்றமுக்கணன்பசுபதியாம்வரஞ்சுரர்பால்
பெற்றதன்மையையுரைத்திடும்பெருமறைக்கேற்ப
மற்றவன்றனக்குயர்மகேச்சுரனெனும்வரமும்
உற்றபட்டமுங்கட்டினரும்பவொன்பதனே. (௯௩)

கருதுசீர்புனைபாரதகன்னபர்வத்தில்
திரிபுரப்பிரசங்கத்தில்வெளிப்பெறச்செகமேல்
உரைசெயாநின்றதாதலாலுயருமாபதிக்குச்
சரியிலாமகேச்சுரப்பெயர்வரபலந்தானே. (௯௪)

மூன்றுசீர்மகேச்சுரச்சொற்குமுக்கியப்பொருளாய்
மன்னிநின்றவன்வனந்துழாய்மாலைமாதவனே
அன்னதன்றிமுக்கண்ணனேயென்றறைந்தனையேல்
துன்னுமிவ்விடத்தினிலுரைத்துளமகேச்சுரனே. (௯௫)

உலககாரணனென்னவுமுத்தியையுதவும்
தலைவனென்னவுமுரைத்தலாலனையவார்தன்மை
சுலபமாய்ப்பிறைசூடியவம்மகேச்சுரனுக்
கிலகுமாமறைபுகன்றிடாதினையதுமன்றி. (௯௬)

தங்குமுங்களதானவாகமத்திலேதானே
துங்கமாஞ்சதாசிவனிடத்தம்மகேச்சுரற்குப்
பொங்குந்தோற்றமுமொடுக்கமும்புகன்றிடுகையினால்
அங்கவன்றனக்குலககாரணத்துவமடாதே. (௯௭)

உலககாரணன்செங்கண்மாலேயெனுமுண்மை
பலபடச்சதுமறையினுண்மேற்பகர்கின்றேன்
புலமைகூரவிப்பொழுதுநற்புராணவாசகத்தால்
நிலைமையாகவேவிரித்துரைக்குவெனதுநீகேள். (௯௮)

---

## கசேந்திரவுபாசனைப்பரிச்சேதம்.

தங்குபங்கயமலர்ந்ததோர்தண்புனற்றடத்தில்
பொங்குமும்மதக்கிம்புரிக்களிறொன்றுபுகுந்து
செங்கண்வெள்ளெயிற்றிடங்கர்வாய்ப்பட்டுளந்திகைத்துத்
திங்கினிக்கரையேறுவதரிதெனவெண்ணி. (௧)

